

ஒயிலுக்கு
எழில்சேர்ப்பது

# தாவண்கெரே

நவநாகரிகத் துணிமணிகள்

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்

தாவண்கெரே, கர்நாடகம்.

Thomas/DCM 15 a/tam

# Don't let power cut slash production.

## The right valve gives you the power to achieve higher productivity

Increasing productivity simply means ensuring maximum efficiency while your plant works. AIL CRANE valve is your best bet for increasing efficiency. Choose a gate, globe or check valve in carbon, alloy or stainless steel. They are all rigidly tested to efficiently control the flow of chemicals, hydrocarbons, gases, steam and oil in pipelines.

Crane Company are up against the great production hold up—downtime. They have been at it for 200 years. Developing expertise. Technical know-how.

That explains why Crane is the world's largest selling valve today. Audco India, licensees of Crane Company, guarantee you the Crane quality in valves.

Those who insist on plant efficiency anywhere in the world, insist on Crane valves. If you are equally fussy about increasing productivity, you'll naturally choose the world's largest selling valve. It's yours for the asking. Phone your nearest L&T office today. Our engineer will be at your plant site to tell you how much you stand to gain when you invest a little more in AIL-CRANE valves.



Manufactured by

**AUDCO INDIA LIMITED**

Sole Selling Agents

**LARSEN & TOUBRO LIMITED**

P.O. Box 278, Bombay 400 038
P.O. Box 619, Calcutta 700 016
Post Bag 5247, Madras 600 002
P.O. Box 6223, New Delhi 110 015

# கிரிக்கெட் கிராக்கர்ஸ்


















பவுண்டரி, ஸிக்ஸர், செஞ்சுரி அடிச்சா 'கெட்டி மேளம்' வாசிக்க இவங்களைக் கிரிக்கெட் கிரவுண்டுக்கு அழைச்சுட்டுப் போறேன்!






என்ன முழிக்கிறீங்க? இது 'ஸ்பின் பாட்டிங்!'


ஒரே ஆளா 193 வது ஓவர் 'பௌல்' பண்ணச் சொன்னா அவர் தான் என்ன செய்வார்? 'பௌல்' பண்ற மாதிரி 'பாவலா' பண்ணி டபாய்ச்சி ஓடி டிமிக்கி கொடுக்கறார்!

# சேமிப்புப் பெருகிடவேண்டுமா? எமது வழி வந்திடுவீர்!







பணத்தை முடக்காமல் முதலீடு செய்தால் பணம் பெருகி வளர்கிறது. எமது திட்டங்கள் மூலம் உங்களது சேமிப்பு மேலும் திறம்பட வளர்ந்திடும். ரூ. 600/ முதலீடு செய்தால் எப்படி ரூ. 1982/-ம் ரூ. 9000/- முதலீடு செய்தால் எப்படி ரூ. 29732/-ம் கிடைக்கிறது என்பதை இதோ காணுங்கள்.

இவற்றுள் ஒன்றை தேர்ந்தெடுங்கள் உங்கள் சேமிப்பு பெருகிட நாங்கள் வகை செய்கிறோம்!

| தொகை ரூ. | 62 மாதங்கள் | 78 மாதங்கள் | 120 மாதங்கள் | 144 மாதங்கள் |
|---|---|---|---|---|
| 600 | 1003.30 | 1146 - 20 | 1624.20 | 1982.15 |
| 3000 | 5016.50 | 5731 - 00 | 8121.00 | 9910.75 |
| 9000 | 15049.50 | 17193 - 00 | 24363.00 | 29732.25 |
| 15000 | 25082.50 | 28655 - 00 | 40605.00 | 49553.75 |
| வட்டி வருவாய் (சுமாராக) | 13% | 14% | 17% | 19% |




உங்கள் சேமிப்பு வளருமிடம்

## இந்தியன் பாங்க்

(இந்திய அரசுக்கு முழுதும் சொந்தமானது)

தலைமை அலுவலகம் :
17 வடக்கு கடற்கரை சாலை, சென்னை-600 001

இந்தியாவெங்கிலும் உள்ள கிளைகள் மூலம் உங்கள் நலனில் அக்கறை காட்டும் பாங்க்



**கல்கி**

ஆனந்த மார்கழி, 28 -

- ஜனவரி 12, 1975

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

மேலட்டை -

வண்ணப் படங்கள்:

தில்லிராஜு

## அடுத்த இதழில்



**மறதி மன்னர்கள்!**



போட்டிக் கதை:

**உணர்வின் மறுபக்கம்**

— சாரதி



**சர்வதேச திரைப் படவிழா!**

படங்கள் — தகவல்கள்




சத்யாக்ரஹம்

போரில் வன்முறை

# தேர்தல் வருகிறது!

கல்கி

மலர் 34

இதழ் 24



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

தேர்தல் சீக்கிரமே வந்துவிடும் என்பது நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது சதவீதம் நிச்சயம். நூற்றுக்கு நூறு நிச்சயமாக வேண்டிய இன்னொரு விஷயம் உண்டு. அது மக்கள் பணத்தாசைக்கு அடிமையாகாமல் நன்கு யோசித்துத் தங்கள் வோட்டுரிமையைப் பயன்படுத்துவார்களா என்பது. வாக்காளர்கள் தேசபக்தியுடன் கடமையாற்றக் கடவுள் கிருபை செய்ய வேண்டும்.

அகில இந்திய ரீதியில் நோக்குமிடத்துக் கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்து கொண்டு நாட்டைச் சகல விதங்களிலும் குட்டிச்சுவராக்கி விட்ட இந்திரா அரசை மக்கள் தேவைக்கு அதிகமாக ஒரு நிமிஷம் கூடப் பதவியில் வைத்திருக்கக் கூடாது என்று தீர்மானமாகக் கூறலாம். ஆட்சியில் உள்ள குறைபாடுகளைப் பட்டியல் போட்டுச் சொல்ல வேண்டியதில்லை. மக்களுக்கு அத்துப்படி.

பாரதீய லோக தளம், ஜனசங்கம், ஸ்தாபன காங்கிரஸ் மூன்றும் இணையாவிட்டாலும் ஒத்துழைத்து முயன்றால் இந்திரா அரசை முறியடித்து நிலையான ஒரு கூட்டு சர்க்காரை அமைப்பது சாத்தியமே. தேசிய நலனுக்கு முக்கியத்துவம் தந்து, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடன் செயல்பட்டால் மக்களின் ஆதரவையும் வாழ்த்தையும் நிச்சயம் பெறலாம்.

தமிழகத்தைப் பொறுத்தவரை ஒரே குழப்பம்தான். நேருவுக்கு அருகில் பட்டேல் இருந்ததுபோல் இந்திராவுக்குப் பக்கத்தில் காமராஜ் இருந்தால் நிதானப் போக்குக்கு வழி வகுத்ததாகுமே என்று பலர் நாட்டு நலனில் அக்கறையுடன் மனப்பூர்வமாக எண்ணியதுண்டு. ஆனால் அதிகார பலத்தை நன்குச் சுவைத்து விட்ட இந்திராவை இனி காமராஜராலும்கூட நிதானிக்கச் செய்ய முடியாது என்றுதான் இப்போது தோன்றுகிறது. யாரை வேண்டுமானாலும் எதை வேண்டுமானாலும் தூக்கி எறிந்துவிட்டுத் தன் போக்கில் இயங்குகிற ஆணவச் சர்வாதிகாரப் போக்கு அவரிடம் நாளுக்கு நாள் அதிகரித்தே வருகிறது.

தமிழகத்தில் தமது கட்சி பலவீனமாயிருப்பதை உணர்ந்திருப்பதால் சந்தடிச் சாக்கில் அகப்பட்டதைச் சுருட்டு என்பதே இந்திராவின் தேர்தல் சாணக்கியமாக இங்கு இருந்து வந்திருக்கிறது. முதலில் தி.மு.க., அப்புறம் ஸ்தாபன காங்கிரஸ், இப்போது அ.இ.மு.க. என்று அது தன் நட்பினை மாற்றிக் கொண்டே போகிறது.

ஒருவருக்கு வயதாகிவிட்டதால் கதாநாயகனாக நடிக்கக்கூடாது என்று கூறுவது எவ்வளவு அபத்தமோ அவ்வளவு அபத்தம் ஒருவர் சினிமா நட்சத்திரம் என்பதால் அரசியலில் புகக் கூடாது என்பதும். ஆனால் எம். ஜி. ஆர். அவர்களின் அரசியல் கொள்கைகளும் போக்குகளும் திருப்திகரமாக இல்லை. அவர் முதலில் கம்யூனிஸ்டுகளுடனும் இப்போது இந்திரா காங்கிரஸுடனும் உறவு வைத்துக் கொள்வது தமிழகத்தின் நலனுக்கு நிச்சயம் உகந்த காரியம் அல்ல. சட்டசபையை அ. தி.மு.க.வுக்குத் தந்துவிட்டுப் பாராளுமன்ற ஸ்தானங்களைச் சுருட்டிக் கொள்ளலாம் என்ற இந்திராவின் சூழ்ச்சி பலித்தால் தமிழகத்தைத் தில்லிக்கு அடகு வைத்ததாகும். இத்தகைய பயங்கர நிலை தோன்றாமல் மக்கள் விழிப்புணர்ச்சியுடன் காக்க வேண்டும்.

தி.மு.க. ஆட்சியும் பலவிதங்களில் திருப்தி அளிக்காத நிலையில் இன்று நமக்கு இருக்கும் ஒரே நம்பிக்கை காமராஜ் அவர்கள்தான். அவர் என்ன செய்யப் போகிறார் என்று அறியத் தமிழகம் காத்திருக்கிறது.

வெற்றியோ, தோல்வியோ அது மக்களின் விவேகத்தைப் பொறுத்த விஷயம். எனவே அதைப் பற்றிக் கவலைப்படாமல் காமராஜர் கடமையாற்றட்டும். அவர் எடுக்கும் முடிவு தமிழகத்தின் கௌரவத்துக்கு ஏற்றதாயும் தேச நலனுக்கு உகந்ததாயும் அமையட்டும்.

★ ★ ★ ★

## கும்பகோணம் "லலிதா பார்மஸி" மருந்துகளின் சிறப்பு அம்சங்கள்



ஸ்ரீ காஞ்சி பெரியவாளால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட பகவான் ஸ்ரீ தன்வந்திரியின் ஸன்னிதியில் **மருந்துகள் தயாராவது.**

பல வருஷங்கள் முறைப்படி "ஆயுர்வேதத்தை" அத்யயனம் செய்த நிபுணர்களின் நேர்பார்வையில் **மருந்துகள் தயாராவது.**

எந்த மருந்தையும் எளிதில் முறைப்படி தயாரிக்க உதவியாக பல உயர் வைத்ய நூல்கள் கொண்ட புத்தகசாலை, சிறந்த மூலிகைசாலையுடன் இணைந்து விளங்குவது.

○●○

**சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு**

# லலிதா பார்மஸி

தலைமை ஆபீஸ்:

**கும்பகோணம் Pincode: 612001**
போன்: 123

பிராஞ்சுகள்:

மேல வீதி, தஞ்சாவூர் - 613001
போன்: 549

மஹாதானத் தெரு, மாயூரம் - 609001
போன்: 379

வடக்கு வீதி, சிதம்பரம் - 608001
போன்: 472

நெ. 6, ரங்கநாதன் தெரு,
சென்னை - 600017
போன்: 441454

நெ. 60-B, கச்சேரி ரோடு,
சென்னை - 600004
போன்: 73007

★ ★ ★ ★

# என்ன சேதி?

## காந்தீயச் செம்மல்கள்

காந்தியம் பிறந்த புண்ணிய பூமியிலிருந்து அது எத்தனை வேகமாக மறைந்து வருகிறதோ, அதே வேகத்தில் காந்தியச் செம்மல்களும் நம்மிடமிருந்து விடைபெற்று மறு உலகம் புகுந்து கொண்டிருக்கிறார்கள். கடைசியாக சங்கர் ராவ் தேவ் அவர்களும் திரு ஜே. சிவஷண்முகம் பிள்ளையும் காலமான செய்திகள் வந்துள்ளன.

ஒத்துழையாமை இயக்கம் மகாராஷ்டிரத்தில் பெரும் வெற்றி பெறக் காரணகர்த்தாவாக விளங்கியவர் சங்கர் ராவ் தேவ். காங்கிரஸ் இயக்கம் பட்டி தொட்டிகளிலெல்லாம் பரவ வழி வகுத்தவர். பட்டப் படிப்பு முடித்ததும் இருபத்திநாலாவது வயதில் சம்பாரான் சத்தியாக்கிரகத்தில் குதித்தவர், பின்னால் விடுதலை இயக்கத்தின் ஒவ்வொரு முக்கிய கட்டத்திலும் பிரதான பங்கேற்றார். சுதந்திரம் பெறும் தறுவாயில் அரசியல் சட்டத்தை உருவாக்கும் பணியில் அவர் பெருதவி புரிந்தபோதிலும் காங்கிரஸ் பதவிக்கு வரக்கூடாது; மக்கள் தொண்டாற்றுவதே அதன் பணி என்ற காந்தீயக் கொள்கையை ஏற்றுக் கடைசி வரையில் பதவி ஆசை இன்றியே விளங்கினார்.



சிவசண்முகம் பிள்ளை

பின்னால் வினோபாபாவேயின் பூதான இயக்கத்தில் சேர்ந்தவர் இந்திய — சீன யுத்தத்துக்குப் பின் பீகிங் பாத யாத்திரை கிளம்பினார். இதில் அவர் வெற்றி பெறாது போனாலும் இதில் அடங்கியிருந்த உன்னத லட்சியங்களும் காந்திய மார்க்கமும் அவருக்கு உலகப் புகழ் ஈட்டித் தந்தன.

நூற்றுக்கு நூறு காந்திய வாழ்க்கை நடத்திய மற்றோர் உத்தமர் ஜே. சிவஷண்முகம் பிள்ளை. சென்னை நகர சபை அங்கத்தினராகப் பொது வாழ்வு தொடங்கிப் பின்னர் மேயராகவும் விளங்கினார். சென்னை சட்டசபையின் சபாநாயகராக இருந்து நடுநிலைமை சிறிதும் தவறாமல் நடத்து கொண்டு அந்தப் பதவிக்குப் பெரும் கௌரவம் ஈட்டித் தந்தார். ராஜாஜியின் புகழாரத்துக்கும் ஆளானார். ஹரிஜனத் தலைவராக விளங்கிய அவர் அம்மக்களுக்குப் பெற்றுத் தந்த நன்மைகள் ஏராளம்.

உத்தமத் தலைவர்களின் வாழ்க்கைகளை எடுத்துக்காட்டாகக் கொண்டு, அவர்கள் உழைப்பெல்லாம் வீண் போகாமல் காக்க முயல்வோம்.

## இனிக்கப் பேசினார் இந்திரா

ஆயுதங்களை உற்பத்தி செய்வதில் போட்டா போட்டி வேண்டாம். அந்தப் பெருஞ் செல்வத்தைத் தாழ்வுற்று வறுமை மிஞ்சித் தவிக்கும் உலக மக்களின் புனர் வாழ்வுக்குப் பயன்படுத்தலாம் என்று பிரதமர் இந்திரா பேசியிருக்கிறார். சர்வதேச சட்ட சங்கத்தின் மகாநாட்டினைப் புதுடில்லியில் ஆரம்பித்து வைத்துப் பிரதமர் ஆற்றிய உரை அருமையானது. இதே அளவுகோலை இந்தியா — பாகிஸ்தான் விவகாரத்திலும் அவர் கடைப்பிடிக்க மறக்க மாட்டார் என நம்புவோம். பாகிஸ்தானுடன் எவ்வளவுக்கெவ்வளவு துரிதமாக, எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக நட்புறவைப் பலப்படுத்திக் கொள்ளுகிறோமோ அவ்வளவுக்கு நல்லது. ராணுவப் படை பலப் போட்டா போட்டி குறைந்து மக்கள் நலனுக்குப் பயனாகுமாறு கோடிக் கணக்கான ரூபாய்களைத் திருப்பி விடலாம். நமது கௌரவத்துக்கு உகந்த அளவில் சில அம்சங்களில் விட்டுக் கொடுத்தேனும் நட்புறவை வளர்ப்பது அவசியம். அணுகுண்டு வெடித்துப் பலத்தைப் பிரகடனப்படுத்துவது உதவுபடியான காரியம் அல்ல. நடந்து போனவையெல்லாம் மறந்து போர்ச்சகலுடன் நல்லுறவை வளர்த்துக்கொள்ள நாம் காட்டும் ஆர்வத்தைவிடப் பல மடங்கு அதிக

---

ராஜாஜி சிந்தனை

### கீதை

கீதை மதத்தின் உன்னதமான கோட்பாடுகளைக் கற்றுத் தருகிறது. நல்லொழுக்கம், பண்பாடு பற்றியும் பேசுகிறது. இவற்றை அன்றாட வாழ்க்கையில் பின்பற்றும் மார்க்கத்தை விளக்குகிறது. அது ஒரு தத்துவார்த்தமான நூல் அல்ல. வாழக் கற்றுத் தரும் புத்தகம். குறிப்பிட்ட ஒரு கொள்கையை விடாப்பிடியாகப் பற்றிக் கொள்ளுமாறு அது சொல்லவில்லை. இன்றுள்ள எந்த ஒரு மதக் கோட்பாட்டையும் அது எதிர்க்கவுமில்லை. மக்களை லோகாயதமான வாழ்விலிருந்து விடுபடுமாறு கோரவில்லை. ஒருவன் துறவு பூண விரும்பினால் அதைக் கீதை தடுக்கவுமில்லை. தர்மத்துக்குக் குந்தக மேற்படாத வகையில் துறவு மனப்பான்மையுடனேயே லோகாயத காரியங்களில் எப்படி ஈடுபடலாம் என்பதைக் கற்றுத் தருகிறது. அதன் உபதேசங்கள் மனித குலத்தைப் புரிந்துகொண்ட பண்பான மனோதத்துவ அடிப்படையில் அமைந்தவை.

27-4-1963 — கீதா மண்டல் பிரசுரம், ரத்னகிரி

மாகவே பாகிஸ்தான் விஷயத்தில் நாம் ஆக்கறை கொள்ள வேண்டும்.

நமது நல்லெண்ணத்தையும் நட்புறவையும் காண்பித்துக் கொள்ள ஒரு சந்தர்ப்பமும் வந்திருக்கிறது. பயங்கரமான பூகம்பத்தில் பாகிஸ்தான் மக்கள் ஐயாயிரம் பேர் வரை மடிந்தார்கள். வீடு வாசலிழந்து அவதிப்படுவோர் எத்தனையோ ஆயிரம். இந்தத் துயரத்தில் வாயளவில் பங்கெடுத்துக்கொள்வதுடன் திருப்தி அடையாமல் ஓர் உதவிப் படையை இங்கிருந்து அரசு அனுப்பி வைக்கக் கூடாதா? அதற்கு அனுமதி கிடைக்காமல் போய்விடுமா? கிடைக்கா விட்டாலும் பாதகமில்லை. இயற்கையின் விபரீத விளையாட்டால் பாகிஸ்தான் மக்கள் படும் துயரைத் துடைக்க ஓர் இந்திய நல்லெண்ணக் கோஷ்டி தயாராயிருக்கிறது என்ற செய்தியே ஆச்சர்யகரமான மன மாற்றங்களைப் பலரிடம் ஏற்படுத்துமே. அதிகாரத்தில் உள்ளோர் ஏன் இது குறித்துச் சிந்திக்கவில்லை?

## புத்தாண்டுப் பரிசு !

பாரத மக்களுக்கு அருமையான புத்தாண்டுப் பரிசு அளித்து விட்டார் பட்டோடி. அவருக்கு முழு ஒத்துழைப்பு அளித்து வெற்றிக்கு வழி வகுத்த பாரத அணியை வாழ்த்துகிறோம். முக்கியமாக சந்திர சேகர், பேடி,



சந்திரசேகர் பேடி விசுவநாதன்

விசுவநாத், மதன்லால், இன்ஜினீயர் ஆகியோரைப் பாராட்டி மகிழ்கிறோம்.

இரண்டாவது இன்னிங்ஸில் சந்திரசேகர் வீசிய பந்துகளை ஆரம்பத்தில் மேற்கிந்திய ஆட்டக்காரர்கள் வெளுத்துக் கட்டிய போது கொஞ்சமும் பதற்றமடையாமல் சந்திரசேகரைத் தொடர்ந்து வீசச் சொன்னது பட்டோடியின் சாணக்கியம். சந்திரசேகருக்கு 'மூட்' வரவழைக்க வேண்டும் என்பதை அனுபவபூர்வமாக உணர்ந்து செயல்பட்டார். அது ஓஹோஹோ என்னும்படியான பயன் அளித்துவிட்டது.

நாலு வயதுப் பாலகன் முதல் தொண்டு கிழம் வரை பட்டோடிக்கு ஜே போட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த ஜே கோஷம் தொடர்ந்து கேட்கட்டும் என்று காப்டனை வாழ்த்துவோம்.

## மனித அரக்கர்கள்

மழை பொய்த்ததன் விளைவான கடுங் குளிரினால் வடக்கே பல மரணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவை குறித்து வருந்தினாலும் நாம் சீற்றம் அடையவில்லை. ஆனால் காஷ்மீரத் தலைநகரில் மனநோய் மருத்துவ மனையில் பன்னிரண்டு பேர் குளிரில் விறைத்து மாண்டார்கள் என்ற செய்தியைப் படிக்கும் போது நெஞ்சு கொதிக்கிறது. மக்களின் வரிப் பணத்தை விழுங்கிவிட்டு நோயாளிகளுக்கு அடிப்படையான வசதிகளைக் கூடச் செய்து தராத கிராதகர்கள் இங்கே இருக்கிறார்கள். சுயநலம் மிக்க அரசியல் வாதிகளின் அனுமதியுடன் கொழிக்கிறார்கள்!

## அழித்தது அனாவசியம் !

பழங் காலத்திய தஸ்தாவேஜுகளை, சரித்திர சாசனங்களைச் சேகரித்து வைக்கும் தமிழ்நாட்டு தொல்பொருள் காப்பகத்தில் 86,000 சரித்திர சாஸனங்களை அழித்து விட்டார்களாம்; இடமில்லை என்பதற்காக! இது சரித்திரத்துக்கும் சரித்திர ஆராய்ச்சிக்கும் இழைக்கப்பட்ட மிகப் பெரிய அநீதி என்று அறிஞர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர்.

இடமில்லை என்ற காரணத்துக்காக மதிப்பு மிக்க சாஸனங்களை அழிப்பது விஞ்ஞான முன்னேற்றம் எவ்வளவோ ஏற்பட்டுள்ள இக் காலத்தில் அபத்தமான காரியம். மைக்ரோ ஃபிலிமிங் என்பதாக ஒன்றிருப்பதை நிர்வாகத்தினர் மறந்து விட்டனரா? அலமாரி அலமாரியாக அடுக்கி வைக்க வேண்டியவற்றைக் கையடக்கமான ஒரு பெட்டியில் அடக்கி விடலாம் என்பதை இவர்கள் அறியார்களா? எத்தனையோ வீண் செலவுகளுடன் ஒப்பிடுகையில் மைக்ரோ ஃபிலிமிங்குக்கு அப்படியொன்றும் பிரமாதச் செலவாகி விடவும் போவதில்லை. இனியேனும் விழித்துக்கொள்ளட்டும்;

## விநோபாவின் தவம்

விநோபா அடிகள் மௌன விரதத்தின் போது அதாவது ஓராண்டுகாலத்துக்கு—''ஹரிராம்'' என்ற சொற்களைத் தவிர வேறு எதையுமே எழுதக்கூடப் போவதில்லை என்று உறுதி பூண்டிருக்கிறார். இவ்வளவு கடுமையான மௌன விரதம் காந்திமகான்கூடப் பூண்டதில்லை.

காந்தி மகான் மௌனவிரத நாட்களில் தமது கருத்துக்களை எழுதிக் காட்டுவார். கட்டுரைகள் எழுதுவார்; கடிதங்கள் எழுதுவார். ஆனால் விநோபா இவை யாதொன்றிலும் ஈடுபடாமல் ஹரியையும் ராமனையுமே நினைத்துத் தவமிருக்கப் போகிறார். இவ்வளவு கடும் தவம் இயற்ற வேண்டுமானால் பாரத தேசம் எவ்வளவு ஒழுக்கஹீனம் அடைந்துவிட்டதாக அவர் கருதுகிறார் என்பது நமக்குப் புரிகிறது. பேசியோ எழுதியோ பயனில்லை, இறைவன் அருள்பாலித்தாலன்றி உய்ய வழியில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டார் என்றுதான் அதற்குப் பொருள்.

விநோபா அடிகளின் தவம் பலிக்க நாமும் நமது சக்திக்கு உகந்த அளவில் பிரார்த்திப்போம்.




**கா**மாக்ஷி பண்ணுகிற விசேஷ அநுக்கிரகம் என்ன? அவள் எல்லாவித அநுக்கிரகமும் பண்ணுவதற்கான சக்தி உள்ளவள்; காருண்யமும் உள்ளவள். இருந்தாலும் அவள் விசேஷமாக எதை அநுக்கிரகிக்கிறாள் என்றால் மேதையை அருள்கிறாள். மேதை என்றால் புத்தி சாதுரியம், 'ஜீனியஸ்' என்று இந்தக் காலத்தில் நினைக்கிறார்கள். ஆனால் புத்தி சாதுரியம் அல்லது ஜீனியஸ் நல்லறிவைக் குறிப்பிடுவதாகச் சொல்வதற்கில்லை. அறிவுத் திறமை வேறு; நல்ல தன்மை வேறு. 'மேதை' என்பது வாஸ்தவத்தில் நல்லறிவேயாகும். தைத்திரீய உபநிஷத்தில் ஸ்ரீயை (பொருளை) கொடு என்று ப்ரார்த்திக்கிறபோது, நல்ல புத்தி இல்லாமல் வெறும் செல்வம் மட்டும் வந்தால் விபரீதம்தான் என்பதால் பொருளுக்கு முன்னதாக மேதையைக் கொடு என்று பிரார்த்திக்கச் சொன்னார்கள்.

அந்த மேதாவிலாசத்தை மூகனுக்கு வர்ஷித்தவள் அம்பாள்தான். மூகன் என்றால் ஊமை என்று அர்த்தம். அப்படி ஓர் ஊமையாக இருந்தவன் தன்பாட்டில் காமாக்ஷியின் ஆலயத்தில் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தான். அதே ஆலயத்தில் மகான் ஒருத்தரும் தபஸ் பண்ணிக் கொண்டிருந்தார். 'சிரேஷ்டமான கவித்வ சக்தி பெற்று, அதன் மூலம் லோகமெல்லாம் அம்பாளைத் துதி செய்து க்ஷேமமடைகிற மாதிரியாக ஒரு ஸ்தோத்திரத்தைச் செய்ய வேண்டும் — இதற்கு அம்பாளின் அநுக்கிரகத்தைப் பெற வேண்டும்' என்றே அவர் தபசிருந்தார். அவருக்குக் கர்மா எல்லாம் தீர்ந்து அவர் கேட்கிற வரத்தைப் பெறுகிற பக்குவம் உண்டாவதற்கு இன்னும் காலம் இருந்தது. ஆனாலும் அவருடைய தபஸின் உக்ரத்தைப் பார்த்தால் இன்னமும் தரிசனம் தராமல் காலம் கடத்தக் கூடாது என்று அம்பாளுக்குத் தோன்றிற்று. 'தபஸுக்காகப் பிரசன்னமும் ஆகவேண்டும், ஆனால் வரம் தருகிற பக்குவ காலம் வராததால் அதற்கும் அநுசரணையாக நடந்து கொள்ள வேண்டும்' — சாக்ஷாத் அம்பாளுக்கா இதற்கு வழி தெரியாது? அம்பாள் அவர் முன் பிரசன்னமானாள். தன் வாய் நிறையத் தாம்பூலத்தை அடக்கிக்கொண்டு ''உன் வாயைத் திற'' என்று சொன்னாள் அவரிடம். சகல சப்தப் பிரபஞ்சத்துக்கும் மூலமாக இருக்கப்பட்ட அம்பாளின் தாம்பூல உச்சிஷ்டம் துளி கிடைத்துவிட்டால் போதும், கவித்வ சிகரத்தையே பிடித்து விடலாம்! கிடைக்க முடியாத பாக்கியம் இந்தப் பிரசாதம். ஆனாலும் பக்குவ காலம் வராததால் அந்த மகானுக்குக் கண்ணை மறைத்தது — அதுவும் அவள் லீலைதான். 'எச்சிலை, ஒரு ஸ்திரீ உமிழுகிற எச்சிலை வாயில் வாங்கிக் கொள்வதா?' என்று ரொம்ப நியமங்களோடு தபோ விரதம் அநுஷ்டித்து வந்த பெரியவருக்கு அருவருப்பு உண்டாகி விட்டது. எல்லாவற்றையும் துடைத்துப்போட்டு விட்டு சரணாகதி பண்ணுகிற பக்குவம் வராததால், ''நீ யாரோ ஸ்திரீ! என் தபசுக்கு மோசம் பண்ண வந்திருக்கிறாய்! விலகிப் போ!'' என்று கூறி விட்டார்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான் மூகன் — ஊமை என்பதோடு சாஸ்திர ஞானமும், தபஸ் இதெல்லாமும் தெரியவே தெரியாது. ரொம்ப சாதாரணப் பேர்வழி. ஆனாலும் அம்பாளின் கிருபைக்கு இப்படி எல்லாம் எல்லை இல்லை. அதனால் அந்த மூகன், தபஸ்வி வாயைத் திறக்க மாட்டேன் என்று மறுத்த அதே சமயத்தில், தன் வாயை 'ஆ' வென்று திறந்து வைத்துக் கொண்டு அம்பாளை எதிர்பார்த்தான். ஒரு காரணமும், வியாஜமும் இல்லாமல் கருணை செலுத்துகிற யோக்கியதை அம்பாளுக்கு உண்டு. 'அவ்யாஜ கருணாமூர்த்தி' என்றே சஹஸ்ரநாமத்தில் அவளுக்கு ஒரு நாமா சொல்லியிருக்கிறது. தபஸ்விக்குப் பக்குவ காலம் வரவில்லை என்று ஒரு காரணத்தைப் பார்த்து, கருணையைக் கட்டுப்படுத்திக் கொண்டவளே, இப்போது காரணமில்லாத கருணையோடு, அந்த மூகனிடம் வந்தாள். வாய் நிறைய அடக்கிக் கொண்டிருந்த வெற்றிலையை அந்த மூகனின் வாயில் உமிழ்ந்தாள்.

அவ்வளவுதான்! பிறவி ஊமை அந்த க்ஷணமே மகா கவியாகி விட்டான். உடனே அம்பாளுடைய பெருமையை 'ஆர்யா சதகம்' என்று நூறு ஸ்லோகங்களால் வர்ணித்தான். அவளுடைய சரண கமலங்களைப் பற்றி மட்டுமே நூறு ஸ்லோகங்களை 'பாதாரவிந்த சதக'மாகப் பாடினான். அப்புறம் அவளுடைய கிருபா விலாசத்தை நூறு ஸ்லோகங்களில் 'ஸ்துதி சதக'மாகப் பாடினான். கண்ணழகை விசேஷமாகப் பெற்றதாலேயே 'காமாக்ஷி' எனப்படும் அம்பாளின் கடாக்ஷ விலாசத்தை 'கடாக்ஷ சதகம்' என்று நூறு சுலோகங்களில் வர்ணித்தான். இப்படியே அவளுடைய புன்சிரிப்பின் அழகை மாத்திரமே நூறு சுலோகங்களில் 'மந்தஸ்மித சதகத்தில்' பாடி ஐந்நூறு சுலோகங்களை முடித்தான். இதுவே 'மூக பஞ்சசதீ'. (தொடரும்)

## சிறப்புச் சிறுகதை

ஜெகசிற்பியன்

கீழ் வீட்டின் கூடத்து அறைக் கடிகாரம் இரண்டு தடவை ஓசையாக ஒலியெழுப்பியது. அந்த நள்ளிரவின் அமைதியில் மாடியிலிருந்த அவனுக்குத் தெளிவாகக் கேட்டது.

விடிந்தால் கல்யாணம்; இந்தக் கேசவனுக்குத்தான்! காலை ஆறரை மணி முதல் ஏழரை மணிக்குள் முகூர்த்தம்.

வலப்பக்கவாட்டில் கட்டிலை யொட்டியிருந்த ஜன்னலில் ஏதோ சரசரக்கும் ஒலி அவன் கவனத்தைக் கவர்ந்தது. அந்தச் சன்னலருகில் யாரோ வந்து நிற்பது போலவும் தோன்றியது. ஒருக்களித்துச் சாய்ந்து கழுத்தை நீட்டி உற்றுப் பார்த்தான்.

'ஓ!....இதுதானா?'

அந்த வீட்டின் எதிர்ப் பக்கவாட்டில்—மதில் சுவர் ஓரமாய் — ஒரு தென்னை மரம் வளர்ந்து நின்றது. அதன் ஓலை மட்டையொன்று, குறுகலான பால்கனியின் கைப்பிடிக் கிராதிக்குச் சற்று மேலே வளைந்து சாய்ந்து, கேசவனின் கட்டிலை யொட்டியிருந்த சன்னலைத் தழுவியவாறு சரிந்திருந்தது. அவ்வோலை மட்டை. காற்றில் அசைந்தாடியபோதெல்லாம் சன்னல் கம்பிகளில் உராய்ந்து சரசரப்பு ஒலியை எழுப்பியதுடன் யாரோ எட்டிப் பார்ப்பது போலவும் தோற்றமளித்தது.

இன்றுபோல் நேற்றும் இந்நேரம் வரையில் அவன் தூங்காமல்தான் கண் விழித்துக் கிடந்தான். அதற்கு முந்தின ஐந்தாறு நாட்களும் கூட...



அப்படித்தான். ஆனால் அந்த நாட்களில் தூக்கம் பிடிக்காமல் கிடந்தபோது இருந்த அவனுடைய மனநிலைக்கும் இன்றைய மனநிலைக்கும்தான் எவ்வளவு வேறுபாடு?

திருமணத்துக்கு முந்தின சில இரவுகளில் எந்த ஆண்மகனுக்கும் அந்தரங்கமாகக் கிளர்ந்தெழக்கூடிய ரசாமிர்தக் கற்பனைகள் நிறைந்த மனநிலைதான் அது. பார்க்கப்போனால் அதில் புதுமை எதுவுமில்லை. மனித மனத்தின் அடிப்படையான அவ்வுணர்ச்சியில் புதுமை இருப்பதுமில்லை. ஆனால் இன்றைய—இப்போதைய — அவனது மனநிலையோ? திருமணத்துக்கு முந்தின நாள் இரவில் எந்த ஆண்மகனுக்கும் தோன்ற முடியாத ஒரு புதிய சிந்தனையால் வக்கிரம் அடைந்ததாக அது இருந்தது.

வெளியே வீசிய காற்றினால் அந்தத் தென்னங் கீற்றோலை சன்னல் கம்பிகளில் முன்னைவிட வேகமாக உரசி அதிகச் சரசரப்பு ஒலி எழுப்பியது.

'சனியன்! இருக்கிற வேதனை போதாதென்று இது வேறு?'

பிடித்துக் கொண்டிருந்த சிகரெட்டைச் சாம்பல் குப்பியில் திணித்து விட்டுக் கட்டிலிலிருந்து இறங்கிக் கதவைத் திறந்துகொண்டு மாடித் தாழ்வாரத்துக்கு வந்தான்.

மூன்றரையடி அகலமும் பன்னிரண்டடி நீளமும் கொண்ட குறுகலான பால்கனியின் கிராதி மேல் குறுக்கு வாட்டத்தில் நெடுகச் சாய்ந்து அறைச் சன்னல்வரை நீண்டு கிடந்தது அந்தத் தென்னம் மட்டையோலை.

அந்த ஓலை மட்டையின் முனையைப் பிடித்து மெல்ல வளைத்து இழுத்துப் போய்க் கிராதிக்கு வெளிப்புறமாகக் கீழே அழுத்தினான். அதனால் அது கிராதியை உந்தியபடி காற்றிலே ஆடி அசையாமல் அப்படியே நின்றுவிட்டது.

ஆயினும் பால்கனிக்கு மிகவும் அருகில் வளர்ந்து நின்ற அந்தத் தென்னை மரம் காற்றில் தனது ஓலை மட்டைகளை வீசிச் சுழற்றி ஆனந்த நர்த்தனமிட்டுக் கொண்டிருந்தது. அடியிலிருந்து நடுப் பகுதிவரை நேரே நிமிர்ந்தும், அதற்குமேல் சற்று வளைந்து சாய்ந்தும் வளர்ந்து, நீள நீளமாய்ச் சரிந்த மட்டையோலைகளுடனும், அவற்றினிடையே சரம் கோத்தாற் போல் தொங்கிய இளநீர்க் காய்க் குலைகளுடனும் நின்றது அந்தத் தென்னை மரம். பாலாகப் பொழிந்த நிலவொளியில் அதனைப் பார்க்கும்போது புனலாடி எழுந்த வன தேவதையொருத்தி அங்கு

ஒயிலாக நின்று தனது அழகிய அளகபாரத்தை அவிழ்த்து உதறிக் காற்றில் உலர வைத்துக் கொண்டிருப்பதுபோல் தோன்றியது.

மறுகணம், அவனது புறக்கண்களுக்குப் புலப்பட்ட காட்சி மறைந்து அகக் கண்களில் அதே போன்ற மற்றொரு காட்சி பளிச்சென்று முகிழ்த்தது. அந்தத் தென்னை மரத்தடியில் மானுடப் பெண்ணொருத்தி பருவ எழில் குலுங்கத் தனது கருங்கூந்தலை உலர்த்திக் கொண்டு ஒய்யார ஒயிலுடன் நிற்பதுபோன்ற காட்சியே அது.

நான்கு ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள் காலை —

இந்த வீட்டின் தெரு வாயில் அருகில் வந்து நின்று இதே தென்னை மரத்தின் நடுவில் 'டு-லெட்' என்று ஓர் அட்டையில் எழுதிக் கட்டித் தொங்க விடப்பட்டிருந்ததை அண்ணாந்து பார்த்துவிட்டுத் தயக்கத்துடன் வாயிலைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான் கேசவன். அப்போது அந்தத் தென்னை மரத்தடியில், குளித்துவிட்டு வந்த கோலத்தோடு கூந்தலை உலர்த்தியவாறு நின்றிருந்த ஓர் இளம் பெண், ''யார்? என்ன வேணும்?'' என்று கேட்க, ''இங்கே வீடு காலி இருக்கிறதா?'' என்று கூச்சப் புன்முறுவலுடன் வினவிய கேசவனை அவள் ஒருகணம் ஏற இறங்கப் பார்த்துவிட்டு வீட்டுக்குள் ஓடி மறைந்தாள்.

சற்றைக்குப் பின் வீட்டுச் சொந்தக்காரரான விசுவநாதன் வெளியே வந்து அவனை வராந்தாவுக்கு அழைத்து உட்கார வைத்துக் கொண்டு அவனுடைய விருத்தாந்தங்களையெல்லாம் துருவித் துருவி விசாரிக்கலானார்.

# அடிமை

கேசவனின் சொந்த ஊர் மயிலம். அப்பா இல்லை. அம்மா இருக்கிறாள். ஒரே பிள்ளை. உறவினர் எவரும் அந்த ஊரில் இல்லை. நிலம் நீச்சு என்று எதுவும் கிடையாது. அம்மாதான் படிக்க வைத்தாள். பட்டப் படிப்பை முடிக்கவில்லை. பி. ஏ. இரண்டாம் ஆண்டோடு ஏறக்கட்டிவிட்டு வேலை தேடச் சென்னைக்கு வந்தான். அதிர்ஷ்டவசமாக விமானக் கம்பெனி ஒன்றின் கிளைக் காரியாலயத்தில் வேலை கிடைத்தது. மாதச் சம்பளம் ஆறுநூறு. ஊரிலிருக்கும் அம்மாவுக்கு மாதம் நூறு ரூபாய் அனுப்பி விடுகிறான். நண்பன் ஒருவனின் அறையில் ஓராண்டு தங்கியிருந்து அசௌகரியக் குறையினால் இப்போது தனக்கெனத் தனி ஜாகை பார்க்க வந்திருக்கிறான்.

இவ்விவரங்களைத் தெரிந்து கொண்ட விசுவநாதன் அவனை அழைத்துப் போய்த் தமது வீட்டு மாடியில் காலியாயிருந்த அறையைக் காட்டினார்.

விசுவநாதன் நல்ல மனிதர். நாணயமானவர். மாநகராட்சியின் மின்சார இலாகாவில் பொறுப்பான உத்தியோகத்தில் இருந்தும் 'மஸ்டர்ரோல்' பண்ணத் தெரியாதவர். குடும்பம் சிறியதுதான். இரண்டு பெண் பிள்ளைகள், ஒரு பையன். மூத்த பெண் கலோசனா பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு வீட்டில் 'குதிராய்' நிற்கிறாள். கடைசிப் பையனுக்குப் பத்து வயசாகிறது. மனைவி, தாயார் ஆகியோர் இருக்கிறார்கள்.

கல்யாணமாகாத வாலிபப் பையனை மாடியில் குடிவைக்க முதலில் கொஞ்சம் தயங்கினார் என்றாலும், அவனைப் பார்த்த மாத்திரத்தில் ஏற்பட்ட ஒரு நல்ல அபிப்பிராயத்தினால் இடம் கொடுத்து விட்டுச் சில மாதங்கள்வரை ஜாக்கிரதையாகக் கண்காணித்து வந்ததில்

அவருக்கு உண்டான அந்த முதல் அபிப்பிராயம் முழுக்கச் சரியானதென்று உறுதிப்பட்டுவிடவே, அவன் மீது அவர் மட்டுமின்றி அவருடைய மனைவி மக்களும் அன்பும் மதிப்பும் காட்டலாயினர்.

ஆனால் கேசவன் அவ்வீட்டார் எவருடனும் நெருங்கிப் பழகுவதில்லை. பேச்சு வார்த்தை கூட அதிகம் வைத்துக் கொள்வதில்லை. காலை எட்டு மணிக்குக் காரியாலயத்துக்குக் கிளம்பிப் போனான். இரவு எட்டு, எட்டரை மணிக்குத் திரும்பி வருவான். காப்பி, டிபன், சாப்பாடு எல்லாம் ஹோட்டலில்தான். இப்படியே நான்கு வருடங்கள் ஓடிவிட்டன.

ஒரு ஞாயிற்றுக் கிழமை பிற்பகல். கேசவன் அன்று அபூர்வமாகத் தன் அறையில் தங்கியிருந்தான். கீழே விசுவநாதனின் வீட்டுக்கு ஆண்களும் பெண்களுமாக ஐந்தாறு பேர் வந்தனர். அவர்களை அவர் வரவேற்று உபசரித்ததையும், பிறகு காப்பி, பலகாரம் எல்லாம் தடபுடலாக நடந்ததையும் அவன் பால்கனியில் உலாவியவாறே பட்டும் படாமல் கவனித்துக் கொண்டிருந்தான். வந்தவர்கள் விடைபெற்றுப் போனபோதுதான் அவனுக்கு விஷயம் ஒருவாறு விளங்கியது. விசுவநாதனின் மூத்த மகள் சுலோசனாவை அவர்கள் பெண் பார்த்து விட்டுப் போயிருக்கிறார்கள். அதற்குமேல் அவ்விஷயத்தில் அவன் கவனம் செலுத்தவில்லை.

மூன்றாம் நாள் இரவு ஒன்பது மணி வாக்கில் கீழ் வீட்டில் ஏதோ சண்டை சச்சரவு நடக்கும் சத்தத்தை மாடியிலிருந்தவாறே செவிமடுத்தான். விசுவநாதன்தான் இரைந்து கொண்டிருந்தார். பிறகு அவர் யாரையோ அடிப்பது போலவும் யாரோ அழுவது போலவுமான சத்தங்கள் எழுந்தன. எல்லாம் கொஞ்ச நேரம்தான். பின்னர் அடங்கி விட்டது.

அச்சம்பவம் நடந்த ஒரு மாதத்துக்குப் பின் ஒரு நாள். என்றைக்குமில்லாத அதிசயமாக விசுவநாதன் கேசவனைப் பார்க்க மாடி அறைக்கு வந்தார். சுற்றி வளைத்து, ஏதேதோ பேசியபின், தம் மூத்த மகள் சுலோசனாவை அவனுக்குக் கன்னிகாதானமாய்க் கொடுக்கத் தாமும் தம் குடும்பத்தினரும் மிகுந்த ஆவலுடன் இருப்பதாகச் சொன்னார்.

கேசவனுக்கு இது அதிர்ச்சியாகவே இருந்தது. காரணம், அவன் அன்றுவரை தன் கல்யாணத்தைப் பற்றிக் கனவிலும் எண்ணிப் பார்த்ததில்லை. 'யோசித்துச் சொல்கிறேன்' என்று அப்போதைக்கு அவரிடமிருந்து தப்பிவிட்டான்.

இந்நிலையில் திடீரென்று ஒரு நாள், ஊரிலிருந்து அவனுடைய தாயார் அவனைப் பார்க்க வந்தார். விசுவநாதனே மயிலத்துக்குப் போய்க் கேசவனின் தாயைப் பார்த்து விஷயத்தைச் சொல்லி அவளைச் சம்மதிக்க வைத்துவிட்டு வந்ததன் பலனாகவே அவள் தன் பிள்ளையின் சம்மதத்தைப் பெற வந்திருந்தாள். அத்துடன் அவளிடமிருந்து அறிந்த இன்னொரு விஷயம் அவனைப் பேராச்சரியத்தில் ஆழ்த்தியது.

விசுவநாதனின் மகள் சுலோசனா கேசவனைத் தவிர வேறு எவனையும் செய்துகொள்ள மாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கிறாளாம்! அதனாலேயே நல்ல அந்தஸ்தான இடத்திலிருந்து பெண் கேட்டு வந்த வரனையும் ஏற்க மறுத்து விட்டாளாம்!

அவனுடைய தாயார் தன் பிள்ளையின் மனப் போக்கை நன்கு அறிந்தவளாதலால், அந்தப் பெண்ணை அவன் கல்யாணம் பண்ணிக்கொள்ளத்தான் வேண்டும் என்று வற்புறுத்தாமல், அவளையும், அவளுடைய குடும்பத்தாரையும் தனக்குப் பிடித்திருக்கிறது என்று மட்டுமே சொன்னாள். கேசவனும் அதற்கு மேல் பிடிவாதம் பிடிக்காமல் 'ஆகட்டும்' என்றான்.

விடிந்தால் கல்யாணம் என்ற நிலையில், இன்றிரவு திடீரென வக்கரித்த ஒரு மனப் போக்கில் திருமணம் பற்றி மறு பரிசீலனை செய்ததன் விளைவாகவே இதோ, அவன் கசந்த கற்பனைகளில் மிரண்டு போய்த் தூங்காமல் வாடி வதங்கி நின்று கொண்டிருக்கிறான்.

கல்யாண வீட்டுக் கடிகாரம் மணி இரண்டு என்று அறிவித்த ஓசை அந்த நிசப்தமான நேரத்தில் சற்று உரக்கவே கேட்டது.

கேசவன் அறைக்குத் திரும்பிப் போய்க் கதவைச் சாத்திவிட்டு அந்த அறைக்குள்ளாகவே உலாவினான்.

'நேரம் நகர்ந்து கொண்டிருக்கிறது. இனியும் எண்ணங்களை நீட்டிக் கொண்டிருக்கக் கூடாது. இரண்டிலொரு முடிவுக்கு இப்போதே வந்தாக வேண்டும்.'

தன்னைத் தானே துரிதப்படுத்திக்கொண்ட அவன், ''ஆமாம்; பிறந்தது முதல் இன்றுவரை சுதந்திர மனிதனாக இருந்தேன். இருக்கிறேன். இப்படியே இருந்துவிட வேண்டியதுதான். கல்யாணம் என்ற சிறைக்குள் போய்ச் சிக்கி அடிமையாகி விடக் கூடாது. இதில் மறு சிந்தனைக்கே இடமில்லை'' என்று தன் செவிகளுக்குக் கேட்கும்படியாக வாய்விட்டுச் சொல்லிக் கொண்டான்.

அவனுடைய இந்தப் பேச்சை அவன் செவிமடுத்ததுமே இதுகாறும் அவனது மனத்தில் சூழ்ந்திருந்த குழப்பம், இலை எல்லாம் பொல பொலவென்று உதிர்வதை உணரலானான். அவ்வுணர்வின் உத்வேகத்தில், முன்னை விட வேகமாக உலாவினான்.

'இந்த முடிவைச் செயலாக்குவது எப்படி? இப்போது கீழே எல்லோரும் தூங்கிக்கொண்டிருக்கிறார்கள். இன்னும் ஒன்று ஒன்றரை மணி நேரத்துக்கு அவர்களில் எவருமே கண் விழிக்க மாட்டார்கள். இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு எனக்குத் தேவையான சில முக்கிய பொருட்களை மட்டும் எடுத்துக் கைப்பெட்டியில் போட்டுக்கொண்டு சத்தடி செய்யாமல் கீழே இறங்கிப் போய்விடலாம். எங்கே போவது? அதையெல்லாம் இவ்வீட்டை விட்டு வெளியேறிய பின் தீர்மானித்துக் கொள்ளலாம். கல்யாணத்துக்காக ஆபீசில் பதினைந்து நாட்கள் லீவு எடுத்திருக்கிறேன். மேலும் பதினைந்து நாட்களுக்கு லீவு எழுதிப் போட்டால் நிச்சயம் கிடைக்கும். அப்புறம் அந்த விமானக் கம்பெனியின் வேறு கிளைக் காரியாலயங்கள் ஏதாவதொன்றில் மாற்றல் தரும்படி விண்ணப்பிக்கலாம். கிடைத்தால் போவது,

# பழைய ஆடைக்கு புத்தணிக் கோலம்!

## ஸிங்கர் வழி காட்டுகிறது...

## மெரிட்* தையல் மெஷின் உதவியினால்

அந்த மாயாஜாலத்தைப் பாருங்கள். அதற்கு வேண்டுவதெல்லாம் உங்களுடைய மெரிட்*தையல் மெஷினும் கொஞ்சம் கற்பனைத் திறனும்தான். அதோடு லேஸும் வேண்டும். அதனால் என்ன செய்ய முடியும் என்பதைக் கண்கூடாகக் காணுங்கள். வண்ணம் நிறைந்த பூவணிகளை இணையுங்கள் அல்லது அணிந்த ஆடைகளின் பிரிண்டுகளுக்கு புத்தொளி சேருங்கள். இதோ நீங்கள் பெறுவது பெறுதற்கரிய அழகு மினிரும் ஆடைகள். அது மட்டுமல்ல, அதனால் அவசியமான செலவுகளுக்குத் தேவைப்படும் பணமும் மிஞ்சுகிறது.

மெரிட் தையல் மெஷின் சேமிக்க பல வழிகளில் உங்களுக்கு உதவுகிறது. உங்களிடம் மெரிட் இல்லையேல் தட்டாமல் வாங்குவதற்கு இதுவே தக்க தருணம். ஒரே தடவையில் முழுப் பணமும் தரமுடியாவிடில் சுலபமான தவணைகளில் வாங்குங்கள். உங்கள் தையல் மெஷினின் கொள்விலையை எவ்வளவு விரைவில் திரும்ப மீட்கிறீர்கள் என்பதைக் கண்டு நீங்களே வியப்புறுவீர்கள். அதன் பிறகு உங்களுக்கு எல்லாமே மிச்சம்தான்.

**யாவரும் அறிந்த உண்மை இது. உலகத்திற்கு தையற் கலையைக் கற்பித்தவர்களே நாங்கள்தான்.**

# ஸிங்கர்



*ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட்மார்க்

CHAITRA-SM-53 TAM

# கண்களை ஒருபோதும் கசக்க வேண்டாம்...



# கரிக்கும் கண்களுக்குத் தேவை
# வைஸின்

கரித்தாலும், களைப்படைந்தாலும், கூசினாலும் கண்களைக் கசக்காதீர்கள். சிவந்த கண்களை நிமிட நேரத்தில் இதமுடன் தெளிவாக்குவதற்கு வைஸின் இருக்கிறது.
வைஸின் உபயோகியுங்கள்.
கண்கண்ட பலனை உலகெங்கும் உணர்த்தியுள்ளது வைஸின்.
அது வன்மை வாய்ந்தது,
எனினும் மென்மை கனிந்தது.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

**சில்லறை விலை ரூ. 2.97**
(தல வரிகள் தனி.)

# வைஸின்

**கலங்கிய கண்களிலே கதிரொளி மீட்பது வைஸின்**




**60 வினாடிப் பரிட்சை**

இந்த எளிய வைஸின் பரிட்சையை ஏற்றுப் பாருங்கள். சிவந்த ஒரு கண்ணிலே இரு சொட்டு வைஸின் விட்டுக் கொள்ளுங்கள். ஒரு நிமிடம் கழித்துக் காண்பீர்கள் அத்தாட்சி —ஒரு விழியில் சிவப்பு, மறு விழியில் தெளிவு. (இனி, சிவந்த விழியிலும் வைஸின் இட்டு தெளிவாக்குங்களேன். கண் சிவப்போ, கரிப்போ நீடித்தால், டாக்டரிடம் ஆலோசனை கேளுங்கள்).

Pfizer பைஸர் தயாரிப்பு: "உலக நலனை நாடும் விஞ்ஞானம்"

Pfizer



# மயிலையின் பெருமை!



படத்தில் இருப்பது யார் தெரிகிறதா? ஓ! அந்த ஓரெழுத்து ஆசாமிதானே? பேஷ்! கண்டு பிடித்துவிட்டீர்களே! பள்ளிப் படிப்பு முடிந்து பென்னத்தூர் சுப்பிரமணியம் உயர்நிலைப் பள்ளியிலிருந்து விடை பெற்றுக் கொண்டபோது சோ எஸ். ராமசாமி இப்படித்தான் காட்சி யளித்தார்.

அவர் மட்டுமா? பி. எஸ். ஹைஸ்கூலில் படித்துத் தேறி, பின்னால் பெரும் புகழும் பெற்றவர்கள் எத்தனையோ பேர். திருவாளர்கள் பக்தவத்சலம், டாக்டர் சஞ்சீவி, எம். வி. அருணாசலம், எம். ஏ முத்தையா செட்டியார், எம். ஏ. சிதம்பரம், ஜீ. நரசிம்மன், சிவசைலம், எஸ். பாலசந்தர், ஜெய்சங்கர், வி. வி. குமார், வேங்கட ராகவன் என்று இப்படிப் பட்டியல் நீண்டு கொண்டே போகும்.

பழைய மாணவர்களின் சங்கம் பள்ளிக்கு உண்டு. அங்கத்தினர்கள் ஆண்டுக்கு ஒரு முறை கூடித் தேநீர் விருந்து அருந்தித் திரும்புவதுடன் திருப்தி அடையாமல் பள்ளிக்கு உருப்படியாக ஏதும் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தார்கள். செயலில் இறங்குவது என்று முடிவு எடுத்து விட்டால் நிறைவேற்றப் பணிகளுக்கா பஞ்சம்?

பள்ளியின் திருப்தி தராத நிதி நிலைமை, புதுப்பித்து, விரிவுபடுத்த வேண்டிய கட்டிடங்கள் என்று பல அம்சங்கள் கவனத்தைக் கவர்கின்றன. எல்லாவற்றுக்கும் மேலாகப் பள்ளிக்கென்றே விளையாட்டு மைதானம் ஒன்று தேவை. இப்போதுள்ள மைதானம் கபாலீசுவரர் கோயில் தேவஸ்தானத்திலிருந்து வாடகைக்குப் பெற்றிருப்பது.

இதற்கெல்லாம் நிதி திரட்டும் நோக்கத்துடன் பள்ளியின் பழைய மாணவர் சங்கம் இம்மாதம் 10, 11, 12 தேதிகளில் மேஜர், சோ ஆகியோரின் புதிய நாடகங்களையும், ரமணனின் பாப் இசை நிகழ்ச்சியையும் ஏற்பாடு செய்திருக்கிறது.

பள்ளியின் எழுபதாண்டு நிறைவு விழாவின் போது, பத்து லட்ச ரூபாய்க்குத் திட்டமிட்டு ஆரம்பிக்கும் பணிகள் துரிதமாகவே முடிவடைந்து, 'பிளாட்டினம் ஜூபிலி' கொண்டாடப்படும் போது பள்ளி புதுப் பொலிவும் பொருளாதார ரீதியான தெம்பும் பெற்றுத் திகழ வேண்டும். பழைய மாணவர்கள் கைகொடுக்கட்டும்; புதிய அன்பர்களின் எண்ணிக்கையும் பெருகட்டும்!

தொடர்பு கொள்ள வேண்டிய விலாசம்: எஸ். எம். சுந்தரம், கரஸ்பாண்டண்ட், பி. எஸ். ஹைஸ்கூல், சென்னை—4.

இல்லையானால் அவ்வேலையை விட்டு விட்டு வேறு வேலை தேடிக் கொள்வது. அல்லது வேலையொன்றும் தேடாமல் என் தந்தையைப் போல் நானும்....'

கேசவனின் உடல் திடீரென ஒரு சிலிர்ப்புச் சிலிர்க்கப் பரபரப்புடன் அங்குமிங்கும் பார்த்தான்.

'மாப்பிள்ளை எங்கே? காணுமே! ஓடிப் போய்விட்டாரா? ஏன் போனான்? பெண்ணைப் பிடிக்கவில்லையா? அல்லது பெண் வீட்டார் மேல் எதற்கேனும் — எவர் மீதும் கோபமா?...'

பொழுது விடிந்ததும் அந்தக் கல்யாண வீட்டில் எழப்போகும் இந்தக் கேள்விகளையும் நடக்கப் போகும் அல்லோல கல்லோலங்களையும் எண்ணிப் பார்த்ததுமே அவனுடைய அம்மாவின் முகம் அவனது மனக் கண்ணில் தோன்றியது.

'அவளை எல்லோரும் சூழ்ந்துகொண்டு ஆளுக்கு ஒரு கேள்வியாகக் கேட்டுத் துளைத்தெடுப்பார்கள். அவர்களுக்கெல்லாம் அவள் என்ன பதில் சொல்வாள்? எனக்கு ஒன்றும் தெரியாது என்பாள். அப்படிச் சொல்லி விட்டு ஒரு சிரிப்புச் சிரிப்பாள். அந்தச் சிரிப்பின் பொருள் அவளுக்கும் எனக்கும் மட்டுமே தெரியும்.'

ஆமாம். அப்போது கேசவனுக்கு வயது மூன்று. தத்தித் தவழ்ந்து தளர் நடையிடும் குழந்தைப் பிராயம். வியாபாரம், வருமானம் எல்லாம் அமோகமாய் இருந்து வீட்



''நான் என் மனைவியை 'ஷோபா' என்று அழைப்பேன், என் அம்மா அவளைப் 'பட்டு' என்றுதான் கூப்பிடுவாள்!''

'' ஓ ! ஷோபா - கம் - பட்டு !''

---

டில் செல்வம் கொழித்துக் கொண்டிருந்த காலம். ஒருநாள் இரவு எட்டு மணிக்கு மேல் கடையைச் சாத்திவிட்டு வீட்டுக்கு வந்து தம் மனைவியிடமும் குழந்தைப் பிள்ளையிடமும் கொஞ்சிப் பேசி மகிழ்ந்து, சுவைத்துச் சாப்பிட்ட பின் படுக்கைக்குப் போன தந்தை விடியற்காலை காணோம்! எங்கே போனார், என்ன ஆனார் என்று எவருக்குமே தெரியவில்லை. காரணமோ தகவலோ கிடைக்கவில்லை. ஒரு பத்து வருடங்களுக்குப் பிறகு அவ்வூரிலிருந்து பத்ரிநாத் யாத்திரை சென்று திரும்பிய ஒருவர், அவரை அங்கே சாமியார் குழு ஒன்றில் பார்த்ததாகவும், விசாரிக்கப் போனபோது மாயமாய் மறைந்துவிட்டார் என்றும் கூறினார்.

கேசவனுக்குத் தன் தந்தையின் முகமே சரியாகத் தெரியாது. அவன் தாயோ, கணவரால் கைவிடப்பட்ட சில நாட்களுக்கெல்லாம் ஒரு சந்நியாசினி போலவே கோலம் பூண்டுவிட்டாள்.

நேரம் நகர்வதை உணர்ந்த கேசவன், அறை விளக்கைப் போடாமலே, பயணத்துக்குத் தேவையான சில பொருட்களை மட்டும் பழக்க நிதானத்தைக் கொண்டு தேடித் துழாவி எடுக்க அவசரமாகத் திரும்பினான்..

இந்தச் சமயம், மாடிப் படிகளில் யாரோ ஏறி வரும் ஓசை கேட்கவே திடுக்குற்று நின்றான்.

'யார் இந்நேரத்தில் மாடி ஏறி வருவது? விசுவநாதனாக இருப்பாரோ? அல்லது என் அம்மா வருகிறாளோ?'

திகிலும் திகைப்பும் அடைந்து நின்ற கேசவன், அறைக் கதவைத் திறக்கவோ, சன்னல் பக்கம் எட்டிப் பார்க்கவோ அஞ்சினான். ஏனென்றால், இந்த நள்ளிரவு நேரத்தில் அவன் தூங்காமல் இருப்பதைக் கண்டு ஏதேனும் சந்தேகம் கொண்டு கேள்வி கேட்டால் என்ன பதில் சொல்லுவான்?...

சடாரென்று பாய்ந்து போய்க் கட்டிலில் சாய்ந்து ஒருக்களித்துப் படுத்துக் கொண்டான். அவனது செவிப் புலன் மட்டும் கூர்மையாகக் கவனித்தது. அந்தச் சிறு ஒலி— மாடிப் படியில் யாரோ ஏறுவது போன்ற ஒலி — இப்போது சற்று வித்தியாசமாகக் கேட்டது.

'அடடா! சற்று முன் கீழே இறங்கிப் போவதற்காகத் திறந்த அந்த மாடிப் படிக்கட்டின் ஒற்றைக் கதவைச் சாத்த மறந்து விட்டேனே! அதைச் சாத்தியிருந்தால் இந்தச் சங்கடம் ஏற்பட்டிராது! என்ன முட்டாள்தனம் பண்ணி விட்டேன்!'

தன்னைத் தானே நொந்து கொண்டு காதை மட்டும் நன்றாகத் தீட்டிக் கவனிக்கலானான்.

இப்போது அந்தச் சத்தம் இல்லை. ஆனால் அவனுடைய தலைக்கு நேரே — மிகச் சமீபத்தில் — இருந்த சன்னலண்டை யாரோ வந்து நிற்பது போன்ற ஓர் உணர்வு தட்டியது.

'சன்னலண்டை வந்து நிற்பது யார்? ஒரு கால் அவள் — விடிந்தால் எனக்கு மனைவியாகப் போவதாக மனப்பால் குடித்துக் கொண்டிருக்கும் சுலோசனா — வந்திருப்பாளோ? வந்ததும் அல்லாமல் என் முகத்துக்கு நேரே கையையும் நீட்டுகிறாளோ?'

கேசவனின் உடலும் உள்ளமும் ஒரு குலுக்குக் குலுங்கின.

உச்சந்தலையிலும் நெற்றியிலுமாக மெல்ல வருடுவது போல் இருக்கவே புல்லரித்துப் போனான் அவன். நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. உடலெங்கும் மின் அலை பாய்வது போன்ற சிலிர்ப்பு.

இன்றிரவு படுக்கையில் சாய்ந்தது முதல் சென்ற சில நிமிடங்கள் வரை அவனுடைய மனத்தில் அகண்டாகாரமாய்க் கிளர்ந்திருந்த விரக்தி, வெறுப்பு, திகில், தன்மானம் செருக்கு, எரிச்சல் எல்லாம் இப்போது இழிந்து அழிந்து போயின.

'ஆகா, இந்த வருடல்தான் எவ்வளவு சுகமாக, குளிர்ச்சியாக, இன்பமாக இருக்கிறது! அவளின் கை வருடலே இத்தனை பேரானந்தமாக இருக்கிறதென்றால், இன்னும் அவளது....' — அவன் தன்னை மறந்து கிறங்கினான்.

இந்நேரம் அவனது நெற்றியை வருடிய விரல்கள் இப்போது கன்னத்துக்கு இறங்கித் தவழ்ந்தன!... ஆனால்..... ஆனால்... முன் போல் அந்த விரல்கள் குளுமையாக, இதமாக, மென்மையாக இல்லை; ஏதோ சொர சொரவென்று குத்துவது போலிருந்தது.

கன்னத்தில் சுருக்கென்று ஊசி போல் குத்தவே சிறிது வலியெடுத்துச் சினமடைந்த கேசவன், தனது முகத்தில் இந்நேரம் தவழ்ந்து கொண்டிருந்த கையை வெடுக்கென்று பிடித்து இழுத்தவாறு கட்டிலை விட்டுத் துள்ளி எழுந்தான்.

ஆனால் அவனுடைய கையில் சிக்கியிருந்தது நாளை அவனுக்கு மனைவியாக வரவிருக்கிற சுலோசனாவின் கரம் அல்ல! அந்தத் தென்னங் கீற்றின் முனை ஓலைகள் பழையபடி நெம்பி வந்து சன்னல் கம்பிகளுக்கிடையே புகுந்து அவனது இரும்புப் பிடியில் சிக்குண்டு நசுங்கின!

கீழே, கல்யாணப் பந்தலில் நாதஸ்வரமும் தவிலும் சேர்ந்து மங்கல இசை முழக்கமிட்டு வைகறைப் போதை வாழ்த்தி வரவேற்க ஆரம்பித்தன.

# சிவகாமியின் சபதம்

முப்பத்தெட்டாம் அத்தியாயம்

## வாதாபி மார்க்கம்

புலிகேசியின் படை வாதாபியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. வாதாபியிலிருந்து கிளம்பியபோது அந்தப் படை எவ்வளவு பெரிதாயிருந்ததோ, அதில் பாதிதான் இப்போது இருந்தது. ஆயினும், இன்னமும் இது பெரும் படைதான்.

ஏறக்குறைய மூன்று லட்சம் யுத்த வீரர்கள் அந்தப் படையில் இருந்தார்கள். ஏழாயிரம் போர் யானைகளும் இருந்தன.

போகுமிடத்தை யெல்லாம் சுடு காடாகவும் பாலைவனமாகவும் செய்து கொண்டு அப்படை சென்றது. கிராமங்களும் பட்டணங்களும் கொள்ளையடிக்கப்பட்டன. வீடு 'வாசல்களையும் உடைமைகளையும் காப்பாற்றிக் கொள்ள முயன்ற மக்கள் ஈவிரக்கமின்றிக் கொல்லப்பட்டார்கள். அல்லது அங்கஹீனம் செய்யப்பட்டார்கள். வீடுகளும் குடிசைகளும் வைக்கோற் போர்களும் கொளுத்தி விடப்பட்டன. ஏரிக்கரைகள் வெட்டி விடப்பட்டன.

ஒரு பக்கம் பசியினாலும் இன்னொரு பக்கம் பழி வாங்கும் வெறியினாலும் சளுக்கிய வீரர்கள் இம்மாதிரி பயங்கர அட்டூழியங்களைச் செய்தார்கள். தாங்கள் செய்வது போதாதென்று யானைகளையும் அவர்கள் அந்த நாச வேலையில் ஏவி விட்டார்கள்.

பசியும் வெறியும் கொண்ட போர் யானைகள் தாம் போகும் வழியிலிருந்த பசுஞ் சோலைகளை அழித்தன; பயிர் செய்த வயல்களைத் துவைத்தன. வீட்டுக் கூரையைப் பிடுங்கி வீசின. வைக்கோற்போர்களை இடறி எறிந்தன.

இதனாலெல்லாம் சளுக்கர் படை திரும்பிப் போன பாதை வெகு சுலபமாகத் தெரிந்து கொள்ளும்படி இருந்தது. அந்தப் பாதையானது ஒரு பெரிய பயங்கரமான சூறைக்காற்றுப் போன வழியைப் போலக் காணப்பட்டது. அந்தப் பாதையில் பின்னர் வெகு காலம் அழுகுரலும் புலம்பல் ஒலியும் கேட்டுக் கொண்டிருந்தன. பருந்துகளும் கழுகுகளும் வட்ட



மிட்டுக் கொண்டிருந்தன. நரிகள் பட்டப் பகலிலேயே ஊளையிட்டுக் கொண்டிருந்தன.

**வா**தாபி நோக்கிச் சென்ற சளுக்கர் படையுடன்கூடச் சிவகாமியும் போய்க் கொண்டிருந்தாள்.

அவளைப் பல்லக்கில் வைத்துத் தூக்கிக்கொண்டு போனார்கள். ஆனால் பல்லக்குச் சுமப்பவர்கள் தன்னைத் தூக்கிக் கொண்டு போவதாகவே சிவகாமிக்குத் தோன்றவில்லை. தடுக்கமுடியாத ஏதோ ஒரு விதியானது தன்னை எங்கேயோ அழைத்துப் போய்க் கொண்டிருப்பதாகவே அவளுக்குத் தோன்றியது.

சளுக்கர்களால் சிறைப்பிடிக்கப்பட்ட உடனே அவள் மனத்தில் தோன்றியிருந்த பீதியும், தன்னுடைய கதி என்ன ஆகப் போகிறதோ என்ற கவலையும் இப்போது மறைந்து விட்டன.

அத்தகைய நிலைமையில் ஓர் அபலைப் பெண்ணிடம் சற்றும் எதிர்பார்க்க முடியாத மனோதைரியம் அவளுக்கு ஏற்பட்டிருந்தது. மனோதைரியம் மட்டும் அல்ல; தன்னுடைய சக்தியைக் குறித்த ஒரு பெருமித உணர்ச்சியும் உண்டாகி யிருந்தது!

சிறைப்பிடிக்கப்பட்ட பெண்களை விடுதலை செய்யும்படி புலிகேசியிடம் விண்ணப்பம் செய்து வெற்றி பெற்றதிலிருந்து அந்தப் பெருமித உணர்ச்சி சிவகாமிக்கு உண்டாயிற்று. இதோ ஒரு சக்கரவர்த்தி — பல்லவ சாம்ராஜ்யத்தைக் காட்டிலும் எவ்வளவோ பெரிய சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி— அபலையாகிய தன்னுடைய வேண்டுகோளுக்கு உடனே இணங்கினார்! — இது மட்டுமல்ல; இன்னும் தான் என்ன சொன்னாலும் அந்தப்படி அவர் செய்ய ஆயத்தமா யிருந்தார் என்பதை அவருடைய முக பாவத்திலிருந்து சிவகாமி தெரிந்து கொண்டாள்.

**அ**தே சமயத்தில் சிவகாமி இன்னோர் இரகசியத்தையும் கண்டு கொண்டிருந்தாள். (அல்லது கண்டுகொண்டிருந்ததாக எண்ணினாள்) அன்று காஞ்சியில்



கூடியிருந்த சபையிலே புலிகேசியின் முகத்தைப் பார்த்தபோது ஏதோ ஒரு விளங்காத மர்மம் அதில் இருப்பதாக அவளுக்குத் தோன்றியதல்லவா? அது என்ன என்பது இப்போது அவளுக்குத் தெரிந்து விட்டது. புத்த பிக்ஷு நாகநந்தியின் முகத்துக்கும் புலிகேசியின் முகத்துக்கும் இருந்த ஒற்றுமை தான் அது. ஆஹா! தெரிந்தது மர்மம்! புலிகேசி சக்கரவர்த்தியும் புத்த பிக்ஷுவும் ஒருவரே தான்!

மகேந்திர பல்லவர் மாறுவேடம் பூண்டு தேச யாத்திரை செய்வதுண்டு என்பதைச் சிவகாமி அறிந்திருந்தாள் ஆகையால் புலிகேசியும் அப்படி மாறு வேடம் பூணுவது இயற்கை யென்று அவளுக்குத் தோன்றியது. புத்த பிக்ஷு தன்னுடைய நாட்டியக் கலையில் காட்டிய ஆர்வமெல்லாம் அவளுக்கு நினைவு வந்தது. ஒருவேளை தனக்காகவே புலிகேசி காஞ்சி மீது படையெடுத்து வந்திருக்கலாம் என்றும் அவள் எண்ணமிட்டாள்.

தன்னிடம் இவ்வளவு சக்தி இருக்கிறது என்பது சிவகாமிக்கே வியப்பையும் பிரமிப்பையும் அளித்தது. கொடுமைக்கும் குரூரத்துக்கும் பெயர்போன வாதாபிப் புலிகேசி தன்னுடைய விருப்



பத்தின்படி நடக்கச் சித்தமா யிருக்கிறார்! இந்த நினைவு அடிக்கடி தோன்றி, சிவகாமியின் பெருமிதத்தை வளர்த்து வந்தது. அன்றியும், தன்னுடைய பாதுகாப்பைப் பற்றி அவளுக்குக் கவலை ஏற்படாமலும் செய்தது. தன்னுடைய விருப்பத்துக்கு விரோதமாக ஒன்றும் நடவாதென்றும், தனக்குத் தீங்கு எதுவும் நேராதென்றும் அவள் தைரியம் கொண்டாள்.

இந்த நாட்களில் சிவகாமி மாமல்லரைப் பற்றி நினைத்தாளா? நல்ல கேள்வி! அவளுடைய எல்லாவித



மானஸீக அனுபவங்களுக்கும் அடிப்படையில் மாமல்லரின் நினைவு இருந்து கொண்டுதான் இருந்தது. ஆனால் அந்த நினைவு அவ்வப்போது விசித்திர ரூபங்களைக் கொண்டது. அன்பு ஆத்திரமாயிற்று; ஆத்திரம் துயரமாயிற்று; துயரம் துவேஷத்தையும் பழி வாங்கும் எண்ணத்தையும் உண்டாக்கிற்று.

பல்லவ சாம்ராஜ்யத்தை ஆளப் பிறந்த மாமல்லரால், பல்லவ நாட்டுப் பெண்களைச் சிறைப்பிடிக்கப் படாமல் காப்பாற்ற முடியவில்லை. இந்த ஏழைச் சிற்பியின் மகளால் அவர்களை விடுதலை செய்ய முடிந்தது! இந்தச் செய்தியைச் சத்ருக்னன் அவரிடம் சொல்லும்போது அவர் என்ன நினைப்பார்? மகிழ்ச்சி அடைவாரா? கோபம் கொள்வாரா? அவர் என்ன நினைத்தால் இங்கு யாருக்கு என்ன? கேவலம் சிற்பியின் மகள் என்றுதானே என்னை அவர் அலட்சியம் செய்து விட்டிருந்தார்? அவருடைய தந்தை என்னை அவமானப்படுத்தியதையெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மா இருந்தாரல்லவா? உண்மையிலேயே என்னிடம் அன்பு இருந்தால், என்னைக் காட்டிலும் இராஜ்யத்தைப் பெரிதாக எண்ணி யிருப்பாரா? மகேந்திர பல்லவரிடம் தம் எண்ணத்தைத் தைரியமாய்ச் சொல்லி என்னை மணந்து கொண்டிருக்க மாட்டாரா? அப்படிச் செய்திருந்தால் இந்த விபரீதமெல்லாம் நேர்ந்திருக்குமா?

நல்லது; அவருக்கு ஒரு பாடம் கற்பிக்கிறேன். இதோ ஒரு மகா சக்கரவர்த்தி — பல்லவ இராஜ்யத்தைக் காட்டிலும் மூன்று மடங்கு பெரிய ராஜ்யம் உடையவர் — நான், காலால் இட்ட பணியைத் தலையால் செய்வதற்குக் காத்திருக்கிறார்! மாமல்லர் வந்து இதைப் பார்க்கட்டும்! இப்படிப்பட்ட மகோன்னத பதவியை நான் எவ்வளவு துச்சமாகக் கருதி அவருடன் வருவதற்குச் சித்தமா யிருக்கிறேன் என்பதையும் நேரிலே தெரிந்து கொள்ளட்டும்!

ஒருவேளை அவர் வராமலே இருந்து விட்டால்? — இந்த எண்ணம் தோன்றியதும் சிவகாமியின் உடம்பில் உள்ள இரத்தமெல்லாம் ஒரு கணத்தில் சுண்டிப்போய் அவளுடைய தேகம் ஒரு தோல் கூடாக மாறிவிட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அடுத்த கணம் அவள் மீண்டும் தைரியம் பெற்றாள். வராமலிருந்து விடுவாரா? ஒருநாளும் அப்படிச் செய்யமாட்டார். அவ்வளவு கேவலமான மனுஷர் அல்ல; அவருடைய அன்பும் அவ்வளவு மட்டமானதல்ல. வேலின் மேல் ஆணையிட்டுக் கூறிய வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காகவேனும் அவர் அவசியம் வருவார்.

''ஒருவேளை அவர் வரவில்லையானால்...'' என்பதாகச் சிவகாமி மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு சிந்தனை செய்தாள். வரவில்லையென்றால் அதற்கு என்ன அர்த்தம்? என்னிடம் அவருக்கு உண்மையில் அன்பு இல்லை. என்னிடம் காதல் கொண்டதாக அவர் சொன்னதெல்லாம் வெறும் நடிப்பு என்றுதான் அர்த்தம். நல்லதாய்ப் போயிற்று! அன்பில்லாதவரைப் பிரிந்து வந்ததற்காக நான் ஏன் வருத்தப்பட வேண்டும்? என் தந்தை எனக்களித்த அற்புதமான நாட்டியக் கலை இருக்கிறது. விஸ்தாரமான வாதாபி இராஜ்யம்

இருக்கிறது. அதற்கு அப்பால் ஹர்ஷ வர்த்தனருடைய சாம்ராஜ்யமும் இருக்கிறது. அன்பில்லாத ஒரு மனிதரிடம் பிரேமை வைத்து ஏன் உருகி, உருகி, அழிய வேண்டும்?''

இப்படிச் சிவகாமி எண்ணியபோதே, உண்மையில் அவளுடைய உள்ளம் அந்த அன்பில்லாத மனிதரைக் குறித்து உருகிக் கரைந்து கொண்டிருந்தது. சிச்சீ! இது என்ன வீண் பிரமை! அவர்மட்டும் வந்து என்னை அழைத்துப் போகாவிட்டால், அப்புறம் இந்த உலக வாழ்க்கையில் என்ன இருக்கிறது? எதற்காக வாழ வேண்டும்? நாட்டியமாவது, கலையாவது, மண்ணாங்கட்டியாவது!

வீணாக என்னை நானே ஏமாற்றிக் கொள்வதில் என்ன பிரயோஜனம்? சளுக்கரிடம் சிறைப்பட்டு நான் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பது அவருக்காகத்தான். வழியில் பயங்கர அட்டூழியங்களை யெல்லாம் பார்த்துக் கொண்டு நான் வாதாபிக்குப் போவதும் அவருக்காகத்தான். அவர் வந்து இந்தப் பாதகச் சளுக்கர்களைப் பழி வாங்கி என்னை மீட்டுக் கொண்டு போவார் என்ற நம்பிக்கையினால்தான். அவருடைய அன்புக்காகவே நான் உயிர் வாழ்கிறேன். அவருடைய கௌரவத்தைப் பாதுகாக்கவே நான் வாதாபிக்குப் போகிறேன்.

அவர் என்னை மறந்து விட்டால்? நல்லது அப்புறம் இந்த உயிரை மாய்த்துக்கொள்ள எத்தனை நேரம் ஆகிவிடும்?

சிவகாமி நாட்டியமாடும்போது சில பாடல்களுக்கு அபிநயம் பிடிப்பதற்கு மின்னல் மின்னும் நேரத்தில் உணர்ச்சிகளையும் முக பாவங்களையும் மாற்றிக் கொள்ள வேண்டியதா யிருக்கும். பார்ப்பவர்கள் அம் மாறுதல்களைத் தொடர்ந்து கவனிப்பது கூட அசாத்தியமாகிவிடும். இப்போது சிவகாமியின் உள்ளமானது உண்மையாகவே அந்தகைய மின்னல் வேக உணர்ச்சி மாறுதல்களை அநுபவித்து வந்தது.

* * *

**ப**ல்லவ நாட்டுப் பெண்களை விடுதலை செய்த பிறகு, வட பெண்ணை நதிக் கரை போய்ச் சேரும் வரையில் புலிகேசிச் சக்கரவர்த்தி அவள் இருந்த பக்கம் வரவேயில்லை. புலிகேசியின் புத்த பிக்ஷு வேஷத்தைப் பற்றிய இரகசியம் தெரிந்துவிடப் போகிறதே என்னும் தயக்கத்தினாலேதான் அவர் தன்னிடம் வரவில்லை என்று சிவகாமி கருதினாள். அது தனக்குத் தெரிந்திருப்பதாக இந்தப் பிரயாணத்தின்போது காட்டிக் கொள்ளக் கூடாது என்றும் அவள் தீர்மானித்துக் கொண்டாள்.

வடபெண்ணை நதிக்கு அக்கரையில், முன்னதாக வந்த வாதாபி சைனியத்தின் பெரும் பகுதி தங்கி யிருந்தது. அந்தச் சைனியத்தோடு பின்னால் புலிகேசியோடு வந்த சிறு சைனியம் ஒன்று சேர்ந்த அன்று இரவு, சிவகாமி ஓர் அதிசயமான கனவு கண்டாள். ஆனால், அது கனவா நனவா என்பது அவளுக்கு வெகுநாட்கள் வரையில் சந்தேகமாக இருந்து வந்தது. கனவா யிருந்தாலும் நனவாயிருந்தாலும், அதில் கண்டதும் கேட்டதும் அவளுடைய உள்ளத்தில்



புதிய பல சந்தேகங்களையும் கவலைகளையும் கிளப்பி விடுவதற்கு ஏதுவா யிருந்தன.

வாதாபி சைனியம் தண்டு இறங்கி யிருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் சிவகாமியின் பல்லக்கு இறக்கப்பட்டது. பிரதேசம் இயற்கை அழகு பொருந்தியதாகவும் நிசப்தமாகவும் இருந்தது. பூரணச் சந்திரன் வானத்திலும் பூமியிலும் பால் நிலவைப் பொழிந்து கொண்டிருந்தான். இனிய இளங்காற்று வீசிக் கொண்டிருந்தது.

நீண்ட பிரயாணத்தினால் பெரிதும் களைப்புற்றிருந்த சிவகாமி ஒரு மரத்தினடியில் படுத்துக் கொண்டாள். அவளுடைய கண்கள் தாமே மூடிக்கொண்

Shilpi-BOB-23a/74 Tam



# எங்களிடம் தருவீர் ரூ. 5,000/-

# திரும்பப் பெறுவீர் ரூ. 35,000/-

**31.50%** ஐவிட அதிக ஆண்டுவட்டி வீதத்தில்!
அதோடு, வரிவிலக்கு வசதியும் உண்டு!

வியப்பாயில்லை? ஆம்! ரூ. 1,000க்கு மேற்பட்ட எவ்வொரு தொகையையும் எம்மிடம் இட்டுவைப்பீர்...எம்முடைய திட்டங்களில் அவ்விட்டுவைப்பு எப்படி வளர்கின்றது என்பதைச் சற்றே பாருங்கள்...7 மடங்கு பெருக்கம் 20 ஆண்டில்!

பட்டியலைப் படித்துப் பாருங்களேன்.

| கால வரையறை | ஆண்டு வட்டிவீதம் (ஏறக்குறைய) |
| --- | --- |
| 61 மாதங்கள் | 13% |
| 84 மாதங்கள் | 14% |
| 108 மாதங்கள் | 16% |
| 120 மாதங்கள் | 17% |
| 144 மாதங்கள் | 19% |
| 180 மாதங்கள் | 23% |
| 240 மாதங்கள் | 31.50% |

ரூ. 3,000/- வரையான பாங்க் வட்டி **வரிவிதிப்பு விலக்கு** பெறுகிறது— அதிக வருவாய் உடையோர்க்கு மிகுந்த பயனளிப்பது.

உங்களுக்கு வேண்டிய விவரங்களைப் பெற அருகாமையிலுள்ள எமது ஏதேனுமொன்றை நாடுவீர்!



நீங்கள் என்றென்றும் வளமையுடன் வாழ—

## பாங்க் ஆஃப் பரோடா

(நாட்டுடைமையாக்கப்பட்ட முக்கிய பாங்க்)

இந்தியாவிலும், வெளிநாடுகளில்—யு.கே., கென்யா, மொரிஷஸ், பிஜித்தீவுகள், உகாண்டா மற்றும் யுனைடெட் அரபு எமிரேட்டிலும் 800க்கும் மேற்பட்ட கிளைகள் உள்ளன.

டன. சிறிது நேரத்துக்கெல்லாம் நித்திரா தேவியின் வயப்பட்டு அயர்ந்த தூக்கத்தில் ஆழ்ந்தாள்.

ஏதோ பேச்சுக் குரல் கேட்டு உறக்கம் சிறிது கலைந்தது. ஆனால், கண்ணிமைகள் திறக்க மறுத்தன. எனினும், யார் பேசுகிறார்கள் என்று தெரிந்து கொள்ளும் ஆவலும் அதிகமா யிருந்தது. பெரிதும் முயன்று கண்ணிமைகளைச் சிறிது திறந்தாள். எதிரே நிலவு வெளிச்சத்தில், அவள் சற்றும் எதிர்பாராத அதிசயமான காட்சி ஒன்று தென்பட்டது.

புலிகேசிச் சக்கரவர்த்தியும் புத்த பிக்ஷுவும் அருகருகே நின்று கொண்டிருந்தார்கள். ஒரே உயரம்; ஒரே உருவம்; முகத்தின் தோற்றம், மூக்கின் அமைப்பு, கண், புருவம் எல்லாம் ஒன்றே. உடைகளில் மட்டும்தான் வித்தியாசம். ஒருவர் சக்கரவர்த்திக்குரிய கிரீடம் முதலியவை தரித்திருந்தார். இன்னொருவர் மொட்டைத் தலையுடனும் காவி வஸ்திரத்துடனும் விளங்கினார்.

இதைப் பார்த்த சிவகாமி, தன் மனத்துக்குள், 'ஆ! இதென்ன! புலிகேசியும் புத்த பிக்ஷுவும் ஒருவர் தானே? இங்கே தனித் தனியாய் நிற்கிறார்களே? ஆகையால் இது உண்மையான காட்சியல்ல. நாம் கனவு காண்கிறோம். கனவிலே தான் இந்த மாதிரிப் பிரமை நமக்கு ஏற்பட்டிருக்கிறது!' என்று எண்ணமிட்டாள். மறுபடியும் கண்ணிமைகள் மூடிக்கொண்டன.

கண்கள் மூடிக்கொண்ட போதிலும் செவிகள் திறந்திருந்தன. பின்வரும் சம்பாஷணை அவளுடைய காதில் விழுந்தது:

''அண்ணா! நீ சொன்னது இந்தப் பெண்தானே?''

''இவள்தான்!''

''இவள்தான் சிவகாமியா?''

''ஆம், இவள்தான் சிவகாமி!''

''எனக்கு நீ எழுதிய ஓலையில் 'காஞ்சி சுந்தரியை நீ எடுத்துக்கொள். சிவகாமியை எனக்குக் கொடுத்துவிடு' என்று எழுதியிருந்தாயே! அது இந்தப் பெண்ணைப் பற்றித்தானே?''

''ஆமாம், தம்பி, ஆமாம்!''

''அப்படி, இவளிடம் நீ என்ன அழகைக் கண்டாயோ, அதுதான் எனக்குத் தெரியவில்லை. இவளைவிட எத்தனையோ சுந்தரமான பெண்களை நம் வாதாபியிலே நான் பார்த்திருக்கிறேன்.''

'' இவள் நாட்டியமாடும்போது பார்க்க வேண்டும். அப்போது வேறு விதமாகச் சொல்லுவாய்!''

''அதையும் மகேந்திர பல்லவனுடைய சபையிலே பார்த்தேனே! அப்படியொன்றும் அதிசயமாக எனக்குத் தெரியவில்லை.''

''உனக்குத் தெரிந்திராது. கலைக் கண்களோடு பார்ப்பவர்களுக்குத் தெரியும். அஜந்தாச் சித்திரங்களைப் பார்த்து, 'இது என்ன அதிசயம்?' என்று சொன்னவனல்லவா நீ?''

''போகட்டும்! நமது வம்சத்துக்கு நீ ஒருவன் கலைக் கண் உடையவன் இருக்கிறாயே, அதுவே போதும். இந்தத் தென்னாட்டுப் படையெடுப்பில் நமக்கு எல்லாம் அபஜயமாய் முடிந்தது. ஏதோ உன்னுடைய மன விருப்பமாவது நிறைவேறியதே, அந்தவரையில் எனக்கும் திருப்திதான்.''

''தம்பி! இவளை நீ சர்வ ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ள வேண்டும். நான் திரும்பி வரும் வரையில் இவ



ளுக்கு ஒரு குறையும் வைக்கக் கூடாது. ஒரு சந்தேகமும் இவள் மனத்தில் உதிக்கக் கூடாது.''

''இதென்ன இப்படிக் கவலைப்படுகிறாய், அண்ணா!''

''நான் இவளுக்காகக் கவலைப்படவில்லை. இவளிடம் இருக்கும் கலைக்காகத்தான் கவலைப்படுகிறேன். அந்தத் தெய்விகக் கலைக்கு யாதொரு குறைவும் வரக்கூடாதே என்று கவலைப்படுகிறேன்.''

''நல்ல கலை! நல்ல கவலை! என்னைக் கேட்டால், என்ன சொல்வேன் தெரியுமா? மகேந்திர பல்லவனிடம் சொன்னதைத்தான் உனக்கும் சொல்வேன்!''

''மகேந்திர பல்லவனிடம் என்ன சொன்னாய், தம்பி!''

''இந்த அற்பர்களுக்கு இவ்வளவு மரியாதை என்ன? எங்கள் நாட்டிலே



## இசைப் பயணம்

அந்த நாட்களில் திருவனந்தபுரம் அரச குடும்பம் ஏழை எளியவர்களுக்கு உணவு வழங்க 'ஊட்டுப் பிறை' என்ற அமைப்பை ஏற்படுத்தியிருந்தது. இந்த வசதியைப் பயன்படுத்திக் கொண்டு எட்டு வருட காலம் ராமஸ்வாமி பாகவதர் என்னும் சமஸ்தான வித்வானிடம் குருகுலவாசம் செய்தவர், பரூர் சுந்தரமய்யர். இவருடைய ஊட்டுப் பிறை சகா பாபநாசம் சிவன்!

அந்த நாட்களில் மகாராஷ்டிரத்தில் பிரசித்தி பெற்ற பாடகரான விஷ்ணு திகம்பர் சுந்தரமய்யரின் வாசிப்பைக் கேட்ட மாத்திரத்திலேயே அவருடைய திறமையில் தம் மனத்தைப் பறிகொடுத்துவிட்டார். கந்தர்வ வித்யாலயா என்ற பெரிய இசைப் பள்ளியில் வயலின் பேராசிரியராக, பத்தொன்பதே வயதான சுந்தரமய்யரை நியமிக்க ஏற்பாடு செய்துவிட்டார். மாதச் சம்பளம் நூறு ரூபாய்! இது நடந்தது 1909ம் ஆண்டில்.

பம்பாய் வாசம், சுந்தரமய்யருக்கு, வட இந்திய சாஸ்திரீய சங்கீதத்தில் ஈடுபாட்டையும் ஆர்வத்தையும் உண்டாக்கியது. தில்ருபா, சாரங்கி, சித்தார் போன்ற இசைக் கருவிகளையும் திறம்படக் கையாளப் பயிற்சி பெற்றார்.

சென்னையில் குடியேறியதும், சென்னை சர்வகலா சாலையிலும் வயலின் ஆசிரியராகச் சேர்ந்து பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாகப் பணியாற்றி 1955ல் ஓய்வு பெற்றார்.

இவருடைய சென்னை இல்லத்துக்கு விஜயம் செய்யாத பிரபல வட இந்திய வித்வான்களே கிடையாது. ஃப்ளூட் மாலியின் அரங்கேற்றமே இவர் வீட்டுக் கூடத்தில்தான்!

சுந்தரமய்யருக்கு ஃப்ளூட் வாசிக்கவும் தெரியும். வீணையை லாகவமாகக் கையாளவும் பழக்கம் உண்டு.

சுந்தரமய்யர் மனம் திறந்து பேசக் கூடியவர். எப்போதும், வயலினைக் கையாளும் விதத்தில், ஏதாவது புது உத்தியைக் கண்டுபிடிக்க முடியாதா என்று பரிசோதனைகள் செய்து கொண்டே இருப்பார். 'ஒரு தந்தி வர்ணம்', 'ஒரு விரல் வாசிப்பு' போன்றவைகளில் இவருக்கு ஆர்வம் அதிகம்.

பாரதத்தில் இவருடைய கலைத் திறமையை உணர்ந்து பாராட்டாத சமஸ்தானங்களே கிடையா. ஆனால் இவர் எந்தப் பாராட்டுதல்களையும் தாமாக விரும்பிப் போய் எதிர்பார்த்ததில்லை.

நியம நிஷ்டைகள் தவறாதவர். மிகுந்த ஆசார சீலர். தம்மிடம் பயில வரும் மாணவர்களும் அப்படியே இருக்க வேண்டும் என்ற அக்கறை உள்ளவர். அப்படி இருந்தால்தான் நல்ல பயிற்சி கிடைக்கும் என்ற நம்பிக்கை உள்ளவர்.

வயலின் பேராசிரியர் பரூர் சுந்தரமய்யர், சமீபத்தில் தமது எண்பத்துநாலாவது வயதில் காலமானார். அவர் மறைந்தாலும், இரண்டு வகை சங்கீதங்களுக்கும் இணைப்பாக அவர் அமைத்த பாலத்தை யாராலும் சிதைக்க முடியாது. அந்த நல்லுறவும் நல்லெண்ணமும் என்றும் நீடிக்கும்.

-பட்டினத்தார்

யென்றால் சாட்டையால் அடித்து நடனம் ஆடச் சொல்வோம் என்று கூறினேன்.''

''பார்த்தாயா? உன்னை நம்பி இவளை எப்படி ஒப்புவித்து விட்டுப் போவது? நான் வேங்கிபுரத்துக்குப் போகவில்லை.''

''இல்லை, அண்ணா, இல்லை! ஏதோ விளையாட்டுக்காகச் சொன்னதை உண்மையாக எடுத்துக் கொள்ளாதே. உன் விருப்பத்துக்கு மாறாக நான் எந்தக் காரியத்திலாவது நடந்து கொண்டிருக்கிறேனா? இவளுடைய மனம் கோணாமல் எல்லா ஏற்பாடுகளும் செய்து வைக்கிறேன். நீ கவலையின்றிப் போய்விட்டு வா!''

இத்துடன் சம்பாஷணை முடிந்ததாகத் தோன்றியது. சிவகாமி மறுபடியும் நினைவற்ற உலகத்தில் ஆழ்ந்தாள்.

மறுநாள் பொழுது விடிந்து சிவகாமி கண் விழித்து எழுந்தபோது மேலே கூறிய கனவுக் காட்சியும் சம்பாஷணையும் சிறிது சிறிதாக ஞாபகம் வந்தன. அவையெல்லாம் கனவுதானா, ஒருவேளை உண்மையான நிகழ்ச்சிகளா என்ற சந்தேகமும் அவள் மனத்தில் எழுந்து குழம்பியது. வெகு நேரம் சிந்தித்துக் கனவாகத்தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தாள்.

அப்படி ஒரே வித உருவமுள்ள இரண்டு பேர் இருக்க முடியாது. இருந்தாலும் ஒருவர் புத்த பிக்ஷுவாகவும் ஒருவர் சக்கரவர்த்தியாகவும் இருக்க முடியாது. அவர்கள் தன்னெதிரே வந்து நின்று அவ்விதமெல்லாம் பேசுவது ஒருநாளும் நடந்திருக்க முடியாத காரியம். தன்னுடைய பிரமை கொண்ட மனத்தில் கற்பனையிலேதான் இவையெல்லாம் நிகழ்ந்திருக்க வேண்டும். மூர்க்கப் புலிகேசியிடம் ஒரு பக்கத்தில் கலைப் பற்றும் இருக்கும் அதிசயத்தைக் குறித்துத் தான் அடிக்கடி எண்ணமிட்டது உண்டல்லவா? அது காரணமாகவே ஒரே மாதிரி இரண்டு உருவங்கள் தன்னுடைய கனவில் தோன்றி அத்தகைய சம்பாஷணையை நடத்தியிருக்க வேண்டும்.

புலிகேசியும் புத்த பிக்ஷுவும் உண்மையில் ஒருவர்தான் — இவ்விதம் சிவகாமி தீர்மானம் செய்து கொண்ட போதிலும் மேற்படி கனவு கண்டதன் காரணமாக அவளுடைய உள்ளம் பெரிதும் கலக்கமும் கவலையும் அடைந்திருந்தது.

(தொடரும்)

# உண்மையே, உன் விலை என்ன? 'சோ'

| கதாபாத்திரங்கள் | | நடிகர்கள் |
|---|---|---|
| ஃபாதர் அருமைநாயகம் | ஒரு கிறிஸ்துவப் பாதிரியார் | அம்பி |
| ஆரோக்கியசாமி | ஒரு பெரும் செல்வந்தர் | பி. என். ராமசாமி |
| தாமஸ் தியாகராஜன் | ஒரு டாக்ஸி டிரைவர் | உதயா |
| குப்புசாமி | ஒரு குமாஸ்தா | நீலு |
| மாசிலாமணி | ஒரு சிவ பக்தர் | கிட்டு |
| சத்யநாராயணா | ஒரு பிரபல வக்கீல் | சோ |
| வெங்கட் | சத்யநாராயணாவின் மகன் | ஆதி |
| பிஷப் | ஃபாதரை விட உயர் பதவியில் இருக்கும் பாதிரியார் | நரசிம்மன் |
| இன்ஸ்பெக்டர் | | பட்டப்பா |
| பப்ளிக் பிராஸிக்யூட்டர் | | ஆர். நாகராஜன் |
| மாஜிஸ்ட்ரேட் | | ரங்காச்சாரி |
| பெஞ்ச் கிளார்க் | | மணி |
| கோர்ட் பியூன் | | ரமேஷ் |
| மிஸஸ் குப்புசாமி | குப்புசாமியின் மனைவி | சோபனா |
| பங்கஜம் | சத்யநாராயணாவின் மனைவி | சுகுமாரி |

புகைப்படங்கள்: உத்தரா

காட்சி 1

(சர்ச், பின்னால் ஒரு பீடத்தில் இயேசு கிறிஸ்துவின் சிலை. இரண்டு மெழுகுவர்த்திகள் எரிந்துகொண்டிருக்கின்றன. ஓரத்தில் பாவ மன்னிப்பு அளிக்கப்படும் கன்ஃபெஷன் பெட்டி இருக்கிறது.)

அருமைநாயகம்: நிஜமாத்தான் சொல்றியா?











தாமஸ்: ஆமாம், ஃபாதர் — நிஜமாத் தான் சொல்றேன். நான் இப்ப... ஒரு கொலை யைப் பண்ணிட்டுத்தான் ஓடி வந்துட்டேன்.

அரு: கொலை செய்துட்டு, அதை இங்கே வந்து ஏன் ஒப்புத்துக்கிறே? நீ போக வேண் டிய இடம் போலீஸ் ஸ்டேஷன் இல்லையா?

தாம: தெரியும் ஃபாதர் — போலீஸ்லே என்ன இருந்தாலும் என்னைக் கண்டுபிடிக்கத் தான் போறாங்க... இல்லாட்டியும் நானே போலீஸ்கிட்டே தான் போகப் போறேன். அதுக்கு முன்னாலே... சட்டத்தின் கையிலே தண்டனை வாங்கிக்கிறதுக்கு முன்னாலே, ஆண்டவன் கையில் மன்னிப்பு வாங்கிக்கத் தான் இங்கே வந்திருக்கேன்.

அரு: நீ கொலையே செய்திருந்தாலும், ஆண்டவன்கிட்ட மன்னிப்பு வேணும்னு எப்ப உன் மனசாலே நினைச்சுட்டியோ, அப் பவே கடவுள் உன்னை மன்னிச்சிட்டிருப்பார்.

தாம: ஃபாதர்... போலீஸ் ஸ்டேஷனுக் குத்தான் போய்க்கிட்டிருந்தேன். வழியிலே சர்ச்சைப் பார்த்தவுடன் இங்கே வந்து பாவ மன்னிப்பு வாங்கிக்கிட்டுப் போகணும்னு ஆசை வந்திருச்சு. எனக்குத் தூக்குத் தண்டனை கொடுப்பாங்களோ, இல்லை ஆயுள் தண்டனை கொடுப்பாங்களோ, தெரியாது. (வருத்தம் தொனிக்கும் குரலில்) கடவுள் எனக்குத் தரக்கூடிய மன்னிப்புக்குக்கூட நான் தகுதி இல்லாதவன்னு சொல்லி அனுப் பிச்சுடாதீங்க.

அரு: அப்படியெல்லாம் சொல்ற உரிமை எனக்குக் கிடையாது..... உம்.... உன் பேர் என்ன?

தாம: தாமஸ் தியாகராஜன்.

அரு: இந்து மதத்திலேயிருந்து கிறிஸ்துவ மதத்துக்கு மாறி வந்த குடும்பத்தைச் சேர்ந்தவனா?

தாம: இல்லை ஃபாதர்.... எங்கப்பா இந்து தான். அவர் இறந்தபிறகு எனக்குன்னு யாருமே சொந்தக்காரங்க இல்லாம போயிட் டாங்க. ஒரு கிறிஸ்தவர்தான் எனக்கு டிரைவிங் லைசென்ஸ் எடுத்துக் கொடுத்து, ஒரு டாக்ஸியும் கொடுத்து ஓட்டச் சொன் னாரு. அவர் சொல்லித்தான் நான் கிறிஸ்தவ மதத்துக்கு வந்துட்டேன்.

அரு: பிழைப்புக்காகவா மதம் மாறினே?

தா: இல்லீங்க... பிழைப்பு கொடுத்தவ ருக்கு நன்றியைக் காட்டறதுக்காக... இப்ப கிறிஸ்துவ மதத்துக்கு வந்து நாலஞ்சு வருஷம் ஆயிடுச்சுங்க...

அரு: உம்.... சரி வா... உன் கன்ஃபெஷ னைச் சொல்லு...

தாம: என்ன சொல்லணும் ஃபாதர்?

அரு: உன் தவற்றை நான் எப்படியப்பா சொல்ல முடியும்? என்ன சொல்லணும்னு நினைக்கிறியோ அதைச் சொல்லு.

(இருவரும் கன்ஃபெஷன் செய்யும் இடத்துக்குப் போகிறார்கள். ஃபாதர் ஒருபுறம் நாற்காலியில் அமர, நடுவே இருவரும் மறைவுக்கு மறுபுறம் மண்டியிட்டுத் தாமஸ் பேசுகிறான்.)

தாம: என் பேர் தாமஸ் தியாகராஜன். நான் ஒரு டாக்ஸி டிரைவர். இன்னிக்குச் சாயங்காலம் சுமார் ஆறு மணிக்கு சி.ஐ.டி. காலனி 5ம் நம்பர் வீட்டிலேயிருந்து ஓர் அம்மா என் டாக்ஸியிலே ஏறினாங்க..... அடையாற்றுக்கு வண்டியை ஓட்டச் சொன் னாங்க. அடையாற்றிலே, காந்தி நகர்லே ஒரு பெரிய பங்களாவுக்குப் போனோம். மாளிகை மாதிரி இருந்தது. வாசல்லே போர்டைப் பார்த்து அது ஆரோக் கியசாமிங்கிறவர் பங்க ளான்னு தெரிஞ்சுக்கிட் டேன். இந்த ஊரிலே பெரிய பணக்காரர் ஆரோக்கியசாமிதான். அவர் வீட்டுக்குப் போய்க்

★



"நான் ஆத்திரத்திலே கொலை செய்துட்டேன். என்னை மன்னிக்கணும் ஆண்ட வனே!"

காம்பவுண்டுலேவண்டியை நிறுத்தினேன். ஓர் ஆள் வெளியே வந்தான். இந்த அம்மாவைப் பார்த்து 'நீங்கதான் கிதாகுப்புசாமியா'ன்னு கேட்டான். 'ஆமாம், நான்தான் கிதாகுப்புசாமி'ன்னு சொன்னாங்க. 'சின்னய்யா உங்களுக்காகத்தான் காத்துக்கிட்டிருக்காரு. உள்ளே வாங்க'ன்னு சொன்னான். அந்த அம்மா என்னை வெயிட் பண்ணச் சொல்லிட்டு உள்ளே போனாங்க. இருபது நிமிஷத்துக்கு மேலே ஆயிடுச்சு. அவங்க திரும்ப வரலே... மீட்டர்லே வெயிட்டிங் சார்ஜ் ஏறிக்கிட்டே இருந்தது. சரி போறதா, இருக்கறதான்னு கேட்டுக்கலாம்னு நினைச்சு உள்ளே போனேன். கீழே ஹால்லே யாருமே இல்லே. பக்கத்துலே ஒரு ரூம்லேயிருந்து யாரோ முனகற சத்தம் கேட்டுது. ரூம் லேசாத்தான் தாழ்ப்பாள் போட்டிருந்ததுன்னு நினைக்கிறேன். தள்ளின உடனே திறந்திடுச்சு... ரூம் உள்ளே ஒரு பையன் — அந்தப் பணக்காரர் ஆரோக்கியசாமி மகனா இருக்கணும்னு நினைக்கிறேன். இந்த அம்மாவைக் கட்டிப் பிடிச்சுப் பலவந்தமா கற்பழிக்க முயற்சி பண்ணிக்கிட்டிருந்தான். அந்த அம்மா வாயிலே துணியை அடைச்சட்டான். அவங்களாலே கத்தவும் முடியலே.... நான் அவன் மேலே பாய்ஞ்சு அந்த அம்மாவைக் காப்பாத்த முயற்சி பண்ணினேன். முடியலே. அப்ப அங்கே ஒரு இரும்புத் தடி இருந்தது. எனக்கு வந்த ஆத்திரத்துலே, அந்த அம்மாவை எப்படியாவது காப்பாத்தணும்னு வந்த வெறியிலே... அந்த இரும்புத் தடியாலே அவன் தலையிலே ஓங்கி அடிச்சுட்டேன். அவன் செத்து விழுந்துட்டான். இதைப் பார்த்த அந்த அம்மா கத்திக்கிட்டே ஓடிட்டாங்க. நானும் வெளியிலே ஓடி வந்து டாக்ஸியை எடுத்துக்கிட்டேன். என் வண்டி பின்னாலேயே அந்த வீட்டு வேலைக்காரங்க துரத்திக்கிட்டு வந்தாங்க. இத்தனை நேரம் போலீசுக்குத் தகவல் போயிருக்கும். என் வண்டி நம்பரையும் அந்த வேலைக்காரங்க பார்த்திருப்பாங்க. நான் ஆத்திரத்துலே கொலை செய்துட்டேன். என்னை மன்னிச்சிடு ஆண்டவனே!

அரு: I absolve you in the name of the God, in the name of the Father. in the name of the Son and in the name of the Holy Spirit. Amen...

(அந்தச் சடங்குகளை முடித்துவிட்டு எழுந்து வருகின்றனர்)

தாம: நான் என் குற்றத்தை ஒப்புத்துக்கிட்டதாலே ஆண்டவன் என்னை மன்னிச்சுடுவார் இல்லீங்களா?

அரு: கடவுள் பாவிகளையும் ரட்சிப்பான், காப்பாற்றுவான். நீ பாவ மன்னிப்புக் கேட்ட பிறகும் உன்னை மன்னிக்காம இருக்கிற அளவுக்குக் கடவுள் கல் நெஞ்சம் படைச்சவன் இல்லேப்பா... தாமஸ்! நீ சொன்னதைக்

★

"தாமஸ்! சட்டப்படிகூட நீ குற்றவாளி இல்லேன்னுதான் எனக்குத் தோணுது!"



கேட்ட பிறகு, சட்டப்படிகூட நீ குற்றவாளி இல்லேயோன்னுதான் எனக்குத் தோணுது...

தாம: என்ன சொல்றீங்க ஃபாதர்? நான் செய்தது கொலேதானே?

அரு: இல்லே. நீ செய்தது... ஒரு பெண்ணினுடைய மானத்தைக் காப்பாத்தினதுதான்.

தாம: அதுக்காக ஒரு உயிரைக் கொலே செய்துட்டேன்.

அரு: சில நல்ல காரியங்கள் செய்யறப்ப சில கெடுதல்கள் நம்மையும் அறியாம நடந்துடுது. நீ அவனேக் கொலே செய்யணும்கிற எண்ணத்திலே அவன் தலேயிலே அடிக்கலேயே. அந்தப் பெண்ணேக் காப்பாத்த வேறே வழியில்லாம அவசரத்திலேதான் அப்படிச் செய்துட்டே...

தாம: அதை நீங்க ஏத்துக்கலாம்...சட்டம் ஏத்துக்காது...

அரு: சட்டம் நியாயத்துக்காகவும் தர்மத்துக்காகவும் ஏற்பட்டதுதான். நீ போலீஸுக்குப் போய் நடந்ததை அப்படியே சொல்லு. கோர்ட்டிலே உனக்கு விடுதலே கிடைக்கும். தாமஸ்! உண்மைக்கு அழிவு கிடையாது. போலீஸிலே போய் நீ நடந்ததைச் சொல்லு.

தாம: அதுக்கப்புறம் அவங்க என்னே நம்பாம அடிச்சு உதைச்சுக் கேட்பாங்க... அடி தாங்காம அவங்க இஷ்டப்படி நான் குற்றவாளின்னு சொல்லணும். அதைவிடப் போன உடனே அடி வாங்காமலேயே குற்றவாளின்னு ஒப்புத்துக்கலாம்னு பார்க்கறேன் ஃபாதர்.... என்ன யோசிக்கிறீங்க ஃபாதர்?

அரு: இப்ப ஆண்டவன் அறிய நீ நிரபராதின்னு எனக்குத் தெரிஞ்சிருக்கும்போது, என்னுடைய கடமை என்னன்னு யோசிக்கிறேன்.

தாம: போலீஸிலே என்னே ஒப்படைக்கிறது தானே உங்க கடமை. நானேதான் போலீசுக்குப் போறேனே.

அரு: போலீஸ்லே உன்னே ஒப்படைக்கிறது சட்டப்படி என்னுடைய கடமை. ஆனு தர்ம நியாயப்படி என் கடமை என்னன்னு புரியாம தவிக்கிறேன். நீ ஆண்டவன்கிட்ட மன்னிப்புக் கேட்கும்போது சொன்ன உண்மையின்படி நீ சட்டப்படி கொலேயாளி இல்லே. ஆனு அந்த உண்மை இப்ப எனக்கு மட்டும் தான் தெரியும். எனக்குத் தெரிஞ்ச உண்மை கோர்ட்டுக்கும் தெரிஞ்சாதான் நீ நிரபராதின்னு சட்டம் சொல்லும்.

தாம: நான் நிரபராதின்னு நிரூபிக்கிறது நடக்காத காரியம் ஃபாதர்.

அரு: நடக்காத காரியம்னு தெரிஞ்சு உண்மைகளே ஒதுக்கி எனக்குப் பழக்கமில்லேயே... இப்ப நீ நிரபராதின்ற உண்மையை நிரூபிக்க வேண்டியது என்னுடைய கடமையாப் போச்சு.

தாம: எப்படி நிரூபிக்க முடியும்?

அரு: ஆண்டவன் உண்மைக்குத் துணே இருப்பான்கிற நம்பிக்கையிலே, உண்மைக்குச் சாட்சிகளேத் தேட வேண்டியதுதான்.

தாம: நீங்க உண்மைக்குச் சாட்சிகளேத் தேடி முடிக்கிறதுக்குள்ளே அந்தப் பணக்காரன் பொய்க்குச் சாட்சிகளேத் தயார் பண்ணிடுவான். என் கேஸ் முடிஞ்சு தண்டனேயும் கொடுத்துடுவாங்க. ஒரு வேலே என்னேத் தூக்கிலே போட்டுட்டாங்கன்னு? அப்புறம் நீங்க உண்மைக்குச் சாட்சிகளேக் கண்டு பிடிச்சு என்ன பிரயோஜனம்?

அரு: தாமஸ்! அநாவசியமா ஒரு நிரபராதி தண்டிக்கப்படக் கூடாது. அந்த மாதிரி ஒரு தவற்றைத் தடுக்கிறதுதான் இப்ப எனக்கு முக்கியம்.

தாம: எனக்காகக் கவலேப்படாதீங்க... வாழறதுலே எனக்கொண்ணும் பெரிய ஆசை இல்லே. நான் போலீசுக்குப் போறேன்.

அரு: கொஞ்சம் இரு — நான் ஒரு வழி யோசிச்சுக்கிட்டிருக்கேன்.

தாம: நீங்க யோசிச்சு முடிக்கிறதுக்குள்ளே என் கேஸே முடிஞ்சிடும். பணக்கார வீட்டுப் பையன் செத்திருக்கான். டாக்ஸி டிரைவர் மாட்டினன்னு கேஸ் சரசரன்னு நடந்துடும்.

(மாதா கோவிலின் மணியோசை கேட்கிறது)

அரு (தீர்மானத்துடன்): நீ போலீஸ்லே மாட்டிக்காம இருந்தா?

தாம: என்ன சொல்றீங்க ஃபாதர்?

அரு: உனக்கு அடைக்கலம் தரதுன்னு நான் முடிவு செய்துட்டேன்.

தாம: ஃபாதர்.... போலீஸ் வந்து நிச்சயமா கேட்பாங்க. டாக்ஸி வாசல்லே நிக்குது — அவங்ககிட்ட பொய் சொல்லப் போறீங்களா?

அரு: நோ..நோ... என் வாழ்க்கையிலே இதுவரைக்கும் நான் பொய் சொன்னது கிடையாது. இனிமேலும் சொல்லமாட்டேன்.

தாம: பின்னே எனக்கு அடைக்கலம் தரேன்னீங்க.... இதெல்லாம் வேண்டாம் ஃபாதர் — எனக்காக நீங்க வம்பிலே மாட்டிக்குவீங்க... சட்டப்படி நீங்களும் குற்றவாளி ஆயிடுவீங்க.

அரு: அதுக்குப் பயந்து ஒரு நிரபராதி தண்டனேக்குள்ளாவதை நான் வேடிக்கை பார்த்துக் கொண்டு நிக்கறது கோழைத்தனம் மட்டுமில்லே; அயோக்கியத்தனம்னும் நினைக்கிறேன். நடந்த உண்மைகளே நிரூபிச்சு, நீ நிரபராதின்னு சட்டத்துக்கு எடுத்துக் காட்டற அளவுக்குச் சாட்சியங்கள் கிடைக்கிற வரை உன்னேப் போலீஸ்கிட்ட ஒப்படைக்கிறது தப்புன்ற முடிவுக்கு நான் வந்துட்டேன்.

தாம: அதுக்காகச் சட்ட விரோதமா எனக்கு அடைக்கலம் கொடுக்கிறது...

(பூட்ஸ் காலடிச் சத்தம்)

போலீஸ் வராங்க... ஃபாதர்... வாசல்லே டாக்ஸியைப் பார்த்திருப்பாங்க....

அரு: நீ உள்ளே போ.

தாம: ஃபாதர்!

அரு: உண்மையின் பேராலேயும் உண்மையின் அவதாரமான ஏசுவின் பேராலேயும் சொல்றேன்..... நீ உள்ளே போ!

(தாமஸ் மாதா கோவிலின் உட்புறமாக ஓடுகிறன்)

இன்: குட் ஈவினிங் ஃபாதர்.

அரு: குட் ஈவினிங். வாங்க.

இன்: ஃபாதர்.... வாசல்லே ஒரு டாக்ஸி நிக்குது. அந்த டாக்ஸி டிரைவர் ஒரு கொலே பண்ணிட்டான். அவனேத் தேடிக்கிட்டிருக்கோம். இங்கே எங்கேயாவது வந்தானு?

அரு: இங்கேதான் இருக்கான்.



## சோர்வா?
## பலவீனமா?

சாப்பிடுங்கள்

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் —
# விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுப்பொருட்களும் அடங்கிய பரிபூரண டானிக்

சில டானிக்குகளில் விட்டமின்கள் மட்டுமே உள்ளன. சிலவற்றில் தாதுச் சத்துக்களோ அல்லது இரும்புச் சத்தோதான் உள்ளன. வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் பரிபூரணமானது. அதில் விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுச்சத்துக்களும் சமசீராக இணைந்துள்ளன—

**தினமும் உற்சாகமும், சக்தியும், வலிமையும் கொடுக்கிறது.**

விட்டமின்கள் நிரம்பியது




## வாட்டர்பரீஸ்
# விட்டமின் டானிக்

சுறுசுறுப்பான ஆரோக்கியத்திற்கு
பரிபூரணமான டானிக்

Grant 9 TM



# எம். ஏ. சி. அறக்கொடை நிறுவனங்கள்

**சிறந்த தமிழ் நாவல், (அ) சிறுகதைத் தொகுப்பு (அ) கவிதைத் தொகுப்பு, (அ) காப்பியம், (அ) நீண்ட கவிதை ஆகியவற்றுக்கான டாக்டர் ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் பரிசு.**

1. மேற்கூறிய பரிசினுக்கு நுழைவு விண்ணப்பங்களை எம். ஏ. சி. அறக்கொடை நிறுவனம் பெருமகிழ்வுடன் வரவேற்கிறது.

2. மேற்கூறிய துறைகளில் ஒன்றில் சிறந்தது எனத் தீர்மானிக்கப்படும் நூலின் ஆசிரியருக்குப் பரிசாகப் பத்தாயிரம் (ரூ. 10,000/-) ரூபாய் ரொக்கமாக அளிக்கப் பெறும்.

3. மேற்கூறிய துறைகளில், சனவரி 1971 முதல் டிசம்பர் 1974 வரையில், முதற்பதிப்பாக வெளிவந்துள்ள நூல்கள் மட்டுமே ஏற்றுக்கொள்ளப்படும். பரிசு பெறத் தகுந்த தலைசிறந்த நூல்கள் மட்டுமே பரிசீலிக்கப்படும். வெறும் பாடப் புத்தகங்கள் பரிசுக்குத் தகுதியானவை அல்ல. அவ்வாறு பரிசு பெறத் தகுதியுடைய நூல்களை ஓர் ஆண்டில் இல்லையெனில், பரிசு வழங்கப்பெற மாட்டாது.

4. நுழைவு விண்ணப்பங்களை, நூலின் ஆசிரியர் (அ) அந்நூலின் ஆசிரியர் அனுமதி பெற்ற பதிப்பாளர் ஆகியோர்தாம் அனுப்ப வேண்டும். அவ்வாறு அனுப்பும் நூல் ஒவ்வொன்றிலும் 4 படிகளை அனுப்புதல் வேண்டும். ஒன்றுக்கு மேற்பட்ட துறைகளில், தம் நூல்களை அனுப்ப விரும்புபவர்கள் அவ்வொவ்வொரு துறைகளிலும் நான்கு படிகளை அனுப்புதல் வேண்டும். நூலாசிரியர் (அ) பதிப்பாளர் அந்நூல்கள் தம் சொந்தப் படைப்பெனவும், மற்ற நூல்களைத் தழுவியதோ, மொழி பெயர்க்கப்பட்டதோ அன்று என்றும் எழுத்து மூலமாக உறுதிமொழி அளிக்க வேண்டும். நூல் அனுப்பப்படும் நாளன்று, அந்நூலின் ஆசிரியர் உயிருடன் இருத்தல் வேண்டும்.

5. நூலின் 4 படிகளையும் செயலாளர், ஆட்சிக் குழு, டாக்டர் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் பரிசுக் குழு, ''சௌத் இந்தியா ஹவுஸ்'', 99, அரண்மனைக் காரத் தெரு, சென்னை-600001 என்ற முகவரிக்கு **10–2–1975க்குள்** சேருமாறு அனுப்புதல் வேண்டும். இத்தேதிக்குள் வந்து சேரும் நூல்கள் மட்டுமே ஏற்றுக் கொள்ளப்படும். மற்றவை இம்முறை பரிசீலனைக்கு மட்டுமின்றி, அடுத்து வரும் பரிசீலனைகளுக்கும் ஏற்றுக் கொள்ளப்படமாட்டா. தனிப்பட்ட முறையில் ஆசிரியர் (அ) பதிப்பாளருடன் எவ்விதத் தொடர்பும் கொள்ளப்பட மாட்டாது.

6. சிறந்த மூன்று நடுவர் கொண்ட குழு ஒன்று, தகுதியுடைய நூலினைத் தேர்ந்தெடுக்கும். பெரும்பான்மையான நடுவர்களின் கருத்தின் பேரில் எம். ஏ. சி. அறக்கொடை நிறுவனத்தின் செயற்குழு பரிசுக்குரிய நூலினைத் தீர்மானிக்கும். ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் பரிசுக்குரியனவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், பரிசுத் தொகை அதற்கேற்பப் பகிர்ந்தளிக்கப்படும். செயற்குழுவின் முடிவே இப்பரிசுத் திட்டத்தினைப் பொறுத்தவரையில் இறுதியானதாகும்.

7. எம். ஏ. சி. அறக்கொடை நிறுவனத்தின் செயற்குழு உறுப்பினர்களோ டாக்டர் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் பரிசு ஆட்சிக் குழு உறுப்பினர்களோ, நடுவர்களோ எழுதிய நூல்கள் பரிசுப் போட்டியில் கலந்துகொள்ள உரியனவாகா.

8. டாக்டர் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் பிறந்த நாள் விழாநாளான 30–9–1975ஆம் தேதியினை ஒட்டிப் பரிசு வழங்கப்பெறும்.

9. இப்பரிசளிப்பினை யொட்டிய எத்தொடர்பும் வரவேற்கப்பட மாட்டாது.

10. அடுத்த பரிசு, நுண்கலைகள் குறித்து எழுதப்பெற்ற நூலிற்கு அளிக்கப் பெறும். இது பற்றிய விவரங்கள் 1976ஆம் ஆண்டுத் தொடக்கத்தில், நாளிதழ்களில் அறிவிக்கப்படும்.

இன்: ஓ... தேங்க்யூ ஃபாதர்.... எங்களுக்காக நீங்களே அவனைப் பிடிச்சு வெச்சிருக்கீங்களே. தேங்க் யூ... அவனை அனுப்புங்க.

அரு: ஐ யாம் ஸாரி இன்ஸ்பெக்டர்.... நான் அவனை உங்ககிட்ட ஒப்படைக்கத் தயாரா இல்லே.

இன்: அவன் ஒரு கொலை பண்ணியிருக்கான். ஹி ஈஸ் ஏ மர்டரர்!

அரு: அவன் நிரபராதி!

இன்: ஃபாதர், இதெல்லாம் இங்கே பேச வேண்டிய விஷயம் இல்லே. கோர்ட்டுலே பேச வேண்டிய விஷயத்தை சர்ச்லே பேசறது நல்லா இல்லே!

அரு: ஆண்டவன் இருக்கிற இடத்தை விட கோர்ட்டை நான் பெரிசா நினைக்கலே.

இன்: ஃபாதர், அவனை நீங்க என்னோட அனுப்ப மறுக்கறது சட்ட விரோதமான காரியம்!

அரு: தெரியும். சட்டத்துக்குச் சில நியாயங்களையும் உண்மைகளையும் புரிஞ்சுக்க நேரம் இருக்கிறதில்லே... சட்டத்துக்கு உண்மையைப் புரிய வைக்கிறதுக்கு முயற்சி செய்யறேன். அதுவும் சட்டவிரோதமா?

இன்: எது சட்ட விரோதம்.... எது இல்லேன்னு தர்க்கவாதம் பண்ண நான் இங்கே வரலே..... ஒரு கொலையாளியை அரஸ்ட் பண்ண வந்திருக்கேன்......

அரு: ஒரு நிரபராதிக்கு நான் அடைக்கலம் கொடுத்திருக்கேன்.

இன்: அதைக் கோர்ட்லே பேசுங்க.

அரு: அதுக்கு என்னைத் தயார்ப்படுத்திக்கணும். சட்டத்துக்கு ஆயத்தங்கள், ஏற்பாடுகள், சாட்சிகள் தேவை. ஆண்டவனுக்கு உண்மை ஒண்ணுதான் தேவை.

இன்ஸ்: கடவுள் நம்பிக்கையைப் பத்தி விவாதிக்க நான் இங்கே வரலே. அந்த ஆள் இங்கேதான் இருக்கான்னு ஒப்புக்கறீங்க, இல்லேயா?

அரு: ஒப்புக்கிறேன்.

இன்: ஆளு எங்கிட்ட ஹேண்ட் ஓவர் பண்ணமாட்டீங்க!

அரு: அதுக்கு என் மனச்சாட்சி இடம் கொடுக்கலே.

இன்: சட்டத்தை மீற உங்க மனச்சாட்சி இடம் கொடுக்குதா?

அரு: சட்டத்தைவிட உண்மை பெரிசுன்னு நம்ப என் மனச்சாட்சி இடம் கொடுக்குது. சட்டத்துக்கே உண்மையை எடுத்துக் காட்டுவது இப்ப என் பொறுப்புன்னு நம்ப என் மனச்சாட்சி இடம் கொடுக்குது.

இன்: நீங்க ரொம்பப் பிடிவாதம் பிடிக்கிறீங்க.

அரு: பொய் சுலபமா பணிஞ்சுடும்.... உண்மையைப் பணிய வெச்சிறது கொஞ்சம் கஷ்டம்தான்.

இன்: ஆல் ரைட்... நான் அப்ப இந்த இடத்தை 'ஸர்ச்' பண்ணணும்...

அரு: இவ்வளவு தூரம் சட்டப்படி பேசற நீங்க ஸர்ச் வாரண்டை எங்கிட்ட காட்ட வேண்டாமா?

இன்: இது ஒரு சர்ச்சா இருக்கிறதுனாலே நான் தயங்க வேண்டியிருக்கு. இட் ஈஸ் ஆல் ரைட். ஐ ஷல் கோ அண்ட் கெட் தி வாரண்ட். அது வரைக்கும் அவனை இங்கேயே வைச்சிருப்பீங்களா?



"போரடிச்சுது! வாடா, நாம இந்த வார்டுக்குள்ளேயே நொண்டிப் பிளே விளையாடலாம்!"

---

அரு: கொஞ்சநாள் அவன் தலைமறைவா இருக்க ஏதாவது வழி இருக்குதான்னுதான் பார்ப்பேன். அப்பதான் உண்மைகளைச் சட்டத்துக்கு எடுத்துக் காட்ட எனக்கு அவகாசம் கிடைக்கும்.

இன்: அப்போ நான் ஸர்ச் வாரண்ட் கொண்டு வரதுக்குள்ளே அவனைத் தப்பிக்க வைச்சுடுவீங்களா?

அரு: முயற்சி செய்வேன்!

இன்: இவ்வளவு சட்டவிரோதமா பேச, உங்களுக்கு எப்படி மனசு வருது?

அரு: உண்மையின் பக்கம் நான் நிக்கறதுனாலே.

இன்: சரி.... அப்ப நான் சர்ச்லே கான்ஸ்டபிள்களைக் காவல் போட்டுட்டுப் போக வேண்டியதுதான்.

அரு: அது உங்க கடமை.

இன்: சர்ச்சை அசிங்கப்படுத்த வேண்டாம்னு பார்த்தேன்.

அரு: ஆண்டவன் இருக்கிற இடத்தை அவ்வளவு சுலபமா அசிங்கப்படுத்த முடியாது!

இன்: ஃபாதர்... இதைச் சொல்ல வேண்டியிருக்கிறதுக்காக நான் வருத்தப்படறேன். நான் போய் வாரண்டைக் கொண்டு வரதுக்குள்ளே நீங்க அவனைத் தப்பிக்கவிட்டா உங்களையே அரஸ்ட் பண்ண வேண்டி வரும்!

அரு: தெரியும்.

இன்: தெரிஞ்சே தப்பு செய்தா அது எவ்வளவு பெரிய குற்றம் தெரியுமா?

அரு: நீங்கள்ளாம் தெரியாம தப்பு செய்துடக் கூடாதேன்னுதான் நான் தெரிஞ்சே ஒரு தாற்காலிகமான தப்பைச் செய்யறேன். நான் செய்தது சரின்னு நிரூபிக்கக் காலம் சீக்கிரம் வரும். ஆண்டவன் உண்மையின் பக்கமேதான் இருப்பார். குட் நைட் இன்ஸ்பெக்டர்!

இன்: நோ ஃபாதர் — நாட் யெட்... நான் திரும்பி வரத்தானே போறேன். ஸோ.. குட் ஈவினிங் எகெய்ன்... நான் கான்ஸ்டபிள்களை இங்கே இருக்கச் சொல்லிட்டுத்தான் போகப் போறேன்.

அரு: யூ ஆர் வெல்கம்.

இன்: நான் திரும்பி வரபோது அவன் இங்கே இல்லேன்னா....?

அரு: உண்மை வேலை செய்ய ஆரம்பிச்சிடிச்சுன்னு அர்த்தம். காட் பிளெஸ் யூ!

(கான்ஸ்டேபிள்களை அங்கேயே இருக்கச் சொல்லி விட்டு இன்ஸ்பெக்டர் வெளியே போகிறார்)

(தொடரும்)

## நேற்றுவரை குழந்தைகளுக்குக் கிட்டாதது

# இன்று உங்கள் குழந்தைக்கு—

# புதிய டெண்டெர் கேர்




### பேபி பவுடர் மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது

உங்கள் குழந்தைக்கு அன்பும், ஆதரவும்— டெண்டெர் கேர்!

மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது. உங்கள் அன்பும், ஆதரவும்தான் உங்கள் குழந்தைக்குக் கிட்டும் பெறும் பேறு.' எதிலுமே மிகச் சிறந்தவற்றைத்தானே உங்கள் குழந்தைக்குத்தருகிறீர்கள்.

இதோ, உங்கள் அன்புக்கு ஒரு புதிய சின்னம்— டெண்டெர் கேர். புதிய பேபி பவுடர் இன்றைய விஞ்ஞான வளர்ச்சி தரும் பரிசு. நேற்று வரை வந்த பஃப்பர் செய்யப்படாத பவுடர்கள் குழந்தையின் மேனியைப் புண்படுத்தக் கூடும். ஆனால் புதிய டெண்டெர் கேர் சரியாக பஃப்பர் செய்யப் பட்டது. குழந்தையின் சருமம் சிவந்து போய் சில நேரங்களில் லேசாக புண்படுவது கூட உண்டல்லவா? இதெல்லாம் நேராமல் உங்கள் குழந்தையை டெண்டெர் கேர் பாதுகாக்கிறது. அதன் நிகரற்ற வியர்வை உறிஞ்சும் சக்தி உங்கள் குழந்தையை எப்போதும் வசதியாக, மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.

பட்டுப் போன்ற டால்க், மிதமான நறு மணம்— எல்லாமே அதில் கவனமாக சேர்க்கப் பட்டுள்ளன. உங்கள் குழந்தைக்காக. அதை 'டெண்டெர் கேர்' என்று அழைப்பதே அதனால்தானே

CTC.G.I.TM

# சர்க்கரைப்பேச்சு



நான் தோன்றுவதற்குக் காரணமான கரும்பு அன்னையே! என் அண்ணாச்சி உருண்டை வெல்லமே, என் ஒன்றுவிட்ட அண்ணன் கருப்பட்டி என்று செல்லமாக அழைக்கப்படும் பனை வெல்லமே! என்னுடன் திருட்டுத் தனமாகக் கலந்து கொள்ளும் சன்ன மணலே!

பொங்கல் விழாவான இன்று மக்கள் 'பொங்கலோ பொங்கல்' என்று கோஷித்து சர்க்கரைப் பொங்கல் செய்து சூரிய பகவானுக்கு நைவேத்தியம் செய்து சாப்பிட்டிருப்பார்கள் என்பது நிச்சயம். ஆனால் அந்தப் பொங்கலுக்கான உண்மைக் கௌரவம், மதிப்புக்குரிய எனது அண்ணாச்சி வெல்லத்தைச் சேர்ந்தது: (சிரிப்பு)

நான் முதலில் எனது மூதாதையரைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். மற்றத் தேசத்தினர் கரும்பு என்றால் இன்னதென்று அறியாதிருந்த காலத்திலேயே இந்தியர்களுக்கு அதைப் பற்றி நன்றாகத் தெரிந்திருந்தது. இந்தியாவுக்குத் தன் படையுடன் வர நேர்ந்த அலெக்ஸாந்தர் கரும்பைப் பார்த்துவிட்டுப் பெரிய புல் மரம் என்று நினைத்து ஆச்சரியப் பட்டாராம். அவருடன் வந்திருந்த ஒருவர், ''இந்தியாவில் தேனீயின் உதவியின்றித் தேனைக் கொடுக்கக் கூடிய ஒரு செடி உள்ளது. அந்தச் செடியில் காய் காய்த்துப் பழம் பழுப்பதில்லை. ஆனால் அதிலிருந்து தேன் கிடைக்கிறது'' என்று தமது குறிப்புக்களில் எழுதி வைத்திருக்கிறார். அவர் தேன் என்று நினைத்துச் சாப்பிட்டது கருப்பஞ் சாறு.

இந்தியாவில் நாளடைவில் கருப்பஞ்சாற்றிலிருந்து வெல்லம் செய்தார்கள்; பழுப்புச் சர்க்கரை தயாரித்தார்கள். மேல் நாட்டினரும் நம்மிடமிருந்து பழுப்புச் சர்க்கரை செய்யும் விதத்தைக் கற்றுக் கொண்டார்கள். அமெரிக்காக்காரர்கள் அதை வெண்ணிறமாகச் செய்யும் முறையைக் கண்டு பிடித்தார்கள். நெப்போலியன் காலத்தில் பிரிட்டன் கடல் முற்றுகை இட்டதால் பிரான்ஸுக்கு வெளி நாட்டிலிருந்து கரும்புச் சர்க்கரை வர முடியவில்லை. அதனால், அந்தச் சக்கரவர்த்தி பீட்ரூட் கிழங்கிலிருந்து சர்க்கரை தயாரிக்கச் செய்தார்.

இப்போது இந்தியாவைத் தவிர, அமெரிக்கா, பிரேஸில் முதலிய நாடுகளில் ஏராளமான கரும்புச் சர்க்கரை உற்பத்தி செய்யப்படுகிறது.

இன்று உலகத்தில் எனக்கு மிகவும் கிராக்கி ஏற்பட்டிருக்கிறது. எனக்குப் பதிலாக உபயோகிப்பதற்காக ரசாயன முறையில் செயற்கைச் சர்க்கரைகள் தயாரிக்கப் படுகின்றன. ஆனால் ஜனங்கள் அவற்றை அதிகம் விரும்பவில்லை.



சில மாதங்களாக என்னை உற்பத்தி செய்யும் அமெரிக்கா, கியூபா, பிரேஸில் முதலிய தேசங்கள் என்னை உற்பத்தி செய்யாத தேசங்களுக்கு நல்ல விலையில் விற்று வருகின்றன. அப்படி விற்று வருவதில் இந்தியாவும் ஒன்று. அது பெட்ரோலியம் வாங்குவதற்காக எண்ணெய் தரும் தேசங்களான இரான், குவைட் முதலிய நாடுகளுக்கு, இங்கே தயாராகும் சர்க்கரையில் கால் பங்குக்கு மேல் அனுப்பிக் கொண்டிருக்கிறது. மேலும் அனுப்ப விரும்புகிறது.

அது அப்படிச் செய்வதற்காக ஜனங்கள் என்மீது ஆத்திரப்படுகிறார்கள். ரேஷன் கார்டு வைத்திருப்பவர்களுக்கு விற்கப்படும் விலையைப் போல் கிட்டத்தட்ட இரண்டு மடங்கு வெளியில் விற்கப்படுகிறது. வருமான அடிப்படையில் மாதம் ரூ. முந்நூறுக்கு மேற்பட்ட வருமானம் உள்ளவர்களுக்கு மாதம் 2 கிலோவும், ரூ. 700க்கு மேற்பட்ட வருமானமுள்ளவர்களுக்கு 5 கிலோவும் தருகிறார்கள். குடும்பத்தில் உள்ள மொத்த நபர்களைப் பற்றிய எண்ணிக்கையைப் பற்றி அரசாங்கம் கவலைப் படவில்லை.

நான் பார்ப்பதற்கும் சுவைப்பதற்கும் மனோரம்மியமாயிருப்பதால் மக்கள் என்னிடம் மோகித்துப் போகிறார்கள். என்னிடம் இரண்டு பெரிய குறைகள் உண்டு. ஒன்று நான் சுத்த சைவம் அல்ல. சர்க்கரை ஆலையில் நான் வெள்ளை வெளேரென்று தோற்றமளிக்க வேண்டும் என்பதற்காக ஒருவகை அசைவப் பொடி பரப்பிய வடிகட்டி மீது கரும்புச் சாற்றைப் பாய்ச்சுகிறார்கள்.

அதிகமாக என்னை உபயோகிப்பதால் மக்களுக்கு, எடை கூடும். டயபெடீஸ், இரத்த அழுத்தம் போன்றவை ஏற்படும். இது இரண்டாவது குறை.

இந்திரா காந்தி அம்மையார் கேட்டுக் கொள்வது போல் கிழவர்கள், கிழவிகள் என்னை உபயோகிக்க வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. முக்கால் கிழவியான அந்த அம்மையார் என்னை உபயோகிக்கா இருக்கிறாரா என்று கேட்கிறேன்.'' (பலமான சிரிப்பு) ஆனால் என்னை வீணடிக்காதீர்கள். குறைந்தபட்ச அளவில் உபயோகிக்க வேண்டும் என்று நாட்டு நலனை உத்தேசித்துக் கேட்டுக் கொள்கிறேன்.

— அனுமகேயம்

# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 24. சென்னைக் குடித்தனம்

★

**சிறிதிலே உண்டு சீர்மை**
**எளிமையில் ஓர் இனிமை**

★

ஒரு விசித்திர சத்திய சோதனையாய் அமைந்த நகைக் கதை ஒன்றுடன், கல்கியின் இல்லற வாழ்க்கை தொடங்கிற்று. கல்யாணம் நடந்து சுமார் ஒரு வருடம் ஆன பிறகு, ருக்மிணியைப் புக்ககத்தில் சேர்ப்பிப்பதற்காக அவளுடைய பெற்றோர்களும் உறவினர்களும் புத்தமங்கலத்துக்கு வந்திருந்தார்கள். அவளைச் சென்னைக்குக் கூட்டி வரவேண்டியதை முன்னிட்டுக் கிருஷ்ணமூர்த்தி, மாம்பலம் ஏரிக்கரைத் தெரு வீடு ஒன்றில் ஒரு பகுதியை அமர்த்தி வைத்து விட்டுத் தம் கிராமத்துக்குச் சென்றிருந்தார்.

பெண் வீட்டார் தங்கியிருந்த வீட்டிலிருந்து திடீரெனக் கூப்பாடும் இரைச்சலும் எழுந்தன. பெண்ணுக்குப் புதிதாகச் செய்து கொண்டு வந்திருந்த தங்கச் சங்கிலி திருட்டுப் போய்விட்டதாம்! தேர் வடம் மாதிரி, பதினாறு பவுனில் இரட்டை வடச் சங்கிலியை எவனோ களவாடிவிட்டானாம்!

அது பொய்யாயிருக்குமோ என்று பிள்ளை வீட்டாருக்குச் சந்தேகம். சங்கிலி பண்ணிப் போடுவதாக வாக்களித்திருந்ததை நிறைவேற்ற இயலாமல், அது திருட்டுப் போய்விட்டதாகக் கதை அளக்கிறார்கள் என்று எண்ணினார்கள். இந்த வீட்டார் இதைச் சொல்ல, அந்த வீட்டார் அதை மறுக்க ஓரே ரகளையாகிவிட்டது. அப்போது கிருஷ்ணமூர்த்தி குறுக்கிட்டு, ''ருக்மிணி, இங்கே வா!'' என்று அதட்டிக் கூப்பிட்டார்.

அப்படி அவர் கூப்பிட்டது, திருட்டுப் போன அல்லது போகாத சங்கிலி விஷயத்தைவிடப் பெரிய அதிர்ச்சியாய் இருந்தது இருதரப்பாருக்கும். பகிரங்கமாய்ப் பெண்டாட்டியைப் பெயர் சொல்லிக் கூப்பிடவாவது!

பயத்துடனும் கூச்சத்துடனும் வந்து நின்ற மனைவியைப் பார்த்து, ''சங்கிலி பண்ணிக் கொண்டு வந்தது உண்மையா?'' என்று கிருஷ்ணமூர்த்தி கேட்டார்.

''ஆமாம்.''

''அது திருட்டுப் போனது உண்மையா?''



■ சாரதையின் தந்திரம் நூலின் முகப்புப் பக்கம்.

முதல் பதிப்பு உதவி : ரோஜா முத்தையா.



■ பாடிக் கொண்டே தான் குளிப்பார் கல்கி.



சாரதா

■ கல்கி அவர்களிடம் அடிக்கடி தூது போய்வரும் பாக்கியத்தைச் சிறுமியாக இருந்தபோது பெற்றவர்.



வேங்கடராம அய்யர்



முத்துசாமி

■ இளைய மாமனார்களின் அன்பான வற்புறுத்தலின் பேரில் அவர்களுடைய கூட்டுக் குடும்பத்தில் கூட ஒருவராய் சுமார் ஆறுமாதகாலம் வசித்தார் கல்கி.

"திருட்டுப் போச்சோ என்னமோ, காணாமல் போயிடுத்து."

ஜாக்கிரதையான பதில். ஆனாலும் உண்மைதான் என்று அவருக்குத் தோன்றியது. மற்றவர்களைப் பார்த்து, "இவள் சொல்வது உண்மைதான், நான் நம்பறேன்" என்றார். "என்னோடு நெடுகிலும் வாழப் போகிறவள், பொய் சொல்லத் துணியமாட்டாள். சங்கிலி திருட்டுப் போயிருந்தாலும் சரி, காணாமல் போயிருந்தாலும் சரி. அது இல்லாமலே இவளை நான் பட்டணத்துக்குக் கூட்டிப் போகத் தயார். எனக்கு வேலை நிறைய இருக்கு. நாளைக்கே புறப்படணும்!" என்றார்.

மறு நாள் நல்ல நாள் இல்லை என்று எல்லோரும் சாதித்ததால் பிறகு அவளைச் சித்தியின் துணையுடன் அனுப்பி வைக்கும்படி சொல்லிவிட்டு அவர் சென்னைக்குத் திரும்பினார்.

மூன்று நாட்களுக்குப் பிறகு, கிராமத்திலிருந்து அவருக்குக் கடிதம் வந்தது. சங்கிலி திருட்டுப் போனது உண்மையே. திருடன் அகப்படாவிட்டாலும் சங்கிலி அகப்பட்டுவிட்டது. அதைத் திருடியவன் எவனோ, அவன், போலீஸ்காரர்கள் கண்டுபிடித்துவிடுவார்கள் என்றோ, உடுக்கைக்காரர் குறி பார்த்துச் சொல்லி விடுவார் என்றோ பயந்து அதைப் பெண் வீட்டாரின் ஜாகைக்குப் பின்புறத்தில் எறிந்து விட்டுப் போய் விட்டான்.

■ ஐயையோ! அத்திம்பேரைப் பாருங்கோ என்று கத்தினாள் சிறுமி சாரதா. எல்லாரும் ஓடி வந்து பார்த்தார்கள். கட்டுக் குடுமியை இழந்து கிராப் வைத்துக் கொண்ட கோலத்தில் நின்றார் கல்கி!

அந்தச் சங்கிலிச் சம்பவம் இளம் தம்பதியரை இணைக்கும் நம்பிக்கைச் சங்கிலியாய் அமைந்தது.

தர்மி அம்மாளுடன் மனைவி வந்து குடித்தனம் போட்டாயிற்று. தான் ஆசைப் பட்டபடி கிருஷ்ணமூர்த்தி தாசில் பண்ணவிட்டாலும் ஏதோ இவ்வளவாவது சம்பாதித்துக் கொண்டு நேரும் கூறுமாய்க் குடித்தனம் போட்டானே என்ற சித்திக்குத் திருப்தி.

குடித்தனம் தொடங்கிப் பத்துப் பதினைந்து நாள் ஆன பிறகு, கல்கிக்கு ஓர் அதிர்ச்சி உண்டாயிற்று. தம் மனைவிக்கு எழுதப் படிக்கத் தெரியாது என்பதை அறிந்ததால் அதிர்ச்சியாய் இருந்தாலும் கோபித்துக் கொள்ளவில்லை. அது அவளுடைய குற்றம் அல்ல. அவளுடைய பெற்றோர்களின் குற்றம். அந்தக் காலத்தில் எத்தனையோ பெற்றோர்கள் பெண்களை எழுத்து வாசனை இன்றி வளர்த்தார்கள். தம்



தாயாருக்குக் கூட எழுதப் படிக்கத் தெரியாது என்பதை நினைத்துக் கொண்டார்.

தாமே மனைவிக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்க விரும்பினார் கிருஷ்ணமூர்த்தி. ஆனால் சித்தி இருக்கிறவரை அவள் பாடம் சொல்லிக்கொள்ள வெட்கப்படுவாள். கொஞ்சம் பொறுத்து ஆரம்பிக்கலாம் என்று நினைத்தார்.

ஒரு நாள் அவர் நவசக்தி அலுவலகத்திலிருந்து கொஞ்சம் முன்னதாக வீட்டுக்குத் திரும்பியபோது, தம் மனைவி அக்கம்பக்கத்து வீட்டுக் குழந்தைகள் புடைசூழ உட்கார்ந்து, அவர்களிடமிருந்து பாடம் கற்றுக் கொண்டிருந்ததைக் கண்டார். ''பேஷ், பேஷ்! குழந்தைகளோடும் குழந்தைகளிடமிருந்தும் படிப்பதுதான் சரியான வழி'' என்று பாராட்டினார். விரைவிலேயே அவள் நன்றாக எழுதவும் படிக்கவும் கற்றுக் கொண்டுவிட்டாள். தம் கணவரும் மற்றவரும் எழுதுவதைப் படித்து ரசிக்கவும் தொடங்கினாள்.

சித்தி ஊருக்குப் போன பின்னர், கிருஷ்ணமூர்த்தியும் கொஞ்சம் கொஞ்சம் பாடம் சொல்லிக் கொடுத்தார். ஆனால் பொதுவாக, தானாகவே கற்றுக் கொள்வதே நல்லது என்று விட்டுவிட்டார். அதோடு அவருக்கே எழுதுவதற்குப் புத்தகங்கள் படிக்கவும் நேரம் போதவில்லை.

சௌகரியமாய் உட்கார்ந்து படிப்பதற்கென்று மலிவான மூங்கில் நாற்காலி ஒன்றைக் கல்கி வாங்கிப் போட்டுக் கொண்டார். புத்தகங்களை அடுக்கி வைத்திருப்பதற்காக மூங்கில் அலமாரி ஒன்றையும் வாங்கினார். மேஜை வாங்கவில்லை. தரையில் பாய் விரித்து உட்கார்ந்து, ஒரு சின்னக் கைப் பெட்டி மேல் காகிதத்தை வைத்துக் கொண்டுதான் எழுதினார். அந்தப் பெட்டிக்குள் ஒரு டப்பியில் மிட்டாய் வைத்திருப்பார். மிட்டாய் சப்பிட்டுக் கொண்டே எழுதுவது அவருடைய அந்தக் காலத்து வழக்கமாய் இருந்தது.

இரவில் எழுதப் படிக்க அரிக்கென் விளக்கு சௌகரியமாய் இருக்கும் என்று அவருக்குத் தோன்றியது. ஒரு ரூபாய்க்கு விதேசி விளக்குக் கிடைப்பதாயிருந்தாலும், அதை வாங்க அவருக்கு மனம் இல்லை. ஐந்து மடங்கு விலைக்கு சுதேசி விளக்கை வாங்கினார். அந்த விளக்கு திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு 'பக் பக்' என்று சிரிக்கும்; அல்லது 'குப் குப்' பென்று குதிக்கும். அழுது வழியும்; அல்லது சினந்து சிவந்து புகையைப் பரப்பும். கவைத்துக்குக் கணம் குணம் மாறிக் கொண்டிருந்த அந்த விளக்கின் துணையுடன்தான், தம் ஆரம்ப காலக் கதை கட்டுரைகள் பலவற்றைக் கல்கி எழுதினார்.

அப்போது அவருக்குச் சம்பளம் ஐம்பது ரூபாய். அந்தக் காலத்தில் அது சின்னச் சம்பளம் அல்ல. ஆனாலும், அது முழுசாக அல்லாமல், ஐந்தும் பத்துமாகத்தான் கிடைக்கும். ஆகவே திட்டமிட்டுச் சிக்கனமாய்ச் செலவு செய்ய வேண்டியது அவசியமாயிற்று. ராயப்பேட்டையிலிருந்து அலுவலகத்துக்கு நடந்தே போய்விட்டு வருவார். இடையே ஏதோ ஆகாரத்துக்கு உப்புமாவோ, தயிர் சாதமோ ஒரு கைத்தூக்கில் கொண்டு போவார். வரும் வழியில் கறிகாய் வாங்கி வருவார். அதில்மட்டும் சிக்கனம் பாராமல் மட்டுக்கு மீறி வாங்கி வருவார். ''இவ்வளவு வாங்கி வந்திருக்கிறீர்களே?'' என்று மனைவி கேட்பாள். ''எல்லாவற்றையும் நறுக்கிப் போட்டுக் கூட்டோ அவியலோ பண்ணி விடேன்'' என்பார். கூட ஒரு கறியையும் வதக்கச் சொல்லுவார். முட்டைக்கோஸையும் வெங்காயத்தையும் சேர்த்து வதக்கிய கறி அவருக்கு மிகவும் பிடித்தமானது. கொஞ்சமாகத்தான் சாப்பிடுவார். ஆனால் உறிஞ்சியும் சப்புக்கொட்டியும் நன்றாகச் சுவைத்து, ''பேஷ், பேஷ்'' என்று மெச்சிக் கொண்டு உண்பார். சாப்பிட்ட கலம் அப்போதுதான் போட்டாற்போல் துப்புரவாய் இருக்கும்.

இராச் சாப்பாடு முடிந்து, திறந்த முற்றத்தில் ருக்மிணி பற்றுப் பாத்திரம் தேய்க்கையில் அவர் துணையாக இருப்பார். மூங்கில் நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருப்பார். அல்லது குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டே பாட்டுப் பாடுவார். அவர் அடிக்கடி பாடும் பாட்டு, பாரதியாரின் ''எந்தையும் தாயும்.''

பாடிக்கொண்டேதான் குளிப்பார்; துணிகளைக் கொடியில் உலறப் போடுகையில் பாடுவார். வெளுத்து வரும் துணிகளையெல்லாம் நனைத்து உலர்த்தச் சொல்லுவார். ஆசாரத்துக்காக அல்ல; எந்தக் கண்ணீரில் தோய்த்ததோ, எந்த இடத்தில் உலர்த்தி வந்திருக்குமோ என்ற சந்தேகத்தில்தான்.

பிராமண ஆசார அனுஷ்டானங்களை எல்லாம் பள்ளிக்கூடத்தை விட்டதிலிருந்தே விட்டு விட்டார். சந்தியாவந்தனம் செய்வதில்லை. காலையில் தோத்திரங்களை மட்டும் சொல்வதுண்டு. தகப்பனாரின் திதிக்குத் தவறாமல் புத்தமங்கலம் போய் வருவார்.



காற்றினும் மெல்லிய
தன்மை கலந்திடும்
மலரிதழ் குளுமை மென்மை
...தாக்கெர்ஸி
2 x 2 ரூபியா வாயில்கள்

ப்ளீச், பிரிண்ட், டை,
''ஸான்பொரைஸ்''
மற்றும் ''மெர்ஸெரைஸ்'':




**தாக்கெர்ஸி**
**க்ரூப் ஆ:ப மில்ஸ்**

ஹிந்துஸ்தான் மில்ஸ் • கிரௌண் மில்ஸ்

ஸர் விதல்தாஸ் சேம்பர்ஸ், 16, பாம்பே ஸமாச்சார் மார்க், பம்பாய்-400 023

Madison/TGM/3/74 A TM.

# ஜலதோஷம் ஒழிக




## காப்பது கைகண்ட ஆறு மருந்துகளின் கலவையான

# ரபெக்ஸ்

வலுவாகத் தேய்ப்பதற்கான ஜலதோஷ நிவாரணி—ஜலதோஷத்தை அதி விரைவில் தணித்திட - அடைபட்ட மூக்கைத் திறகக, மார்பிலுள்ள நெரிசலைக் கரைக்க, உடம்பிலே கதகதப்பூட்ட — தனிப்பட உருப்பெற்றது.

20 கிராம், 65 கிராம் புட்டிகளிலும், 6 கிராம் டப்பியிலும், வருபவை.




**இலவசம்** பால் பேனா*...
20 கிராம் புட்டி
வாங்கும்போது.
* சரக்குகள் இருக்கும் வரை

everest/921/ACW-tm

ஓர் இரவு திறந்த முற்றத்தில் ஒரு திருடன் குதித்துச் சில பாத்திரங்களையும் துணிமணிகளையும் எடுத்துக் கொண்டு போய்விட்டான். ஆகவே, 'அந்த வீட்டில் போதிய பாதுகாப்பு இல்லை என்ற காரணத்தால் அதைக் காலிசெய்துவிட்டு அதே பழைய மாம்பலத்தில் ஈசுவரன் கோவில் தெருவில் ருக்மிணியின் சித்தப்பா, டாக்டர் வெங்கடராமையர் குடியிருந்த பெரிய வீட்டில் ஒட்டுக் குடித்தனமாய் வசிக்கப் போனார்கள்.

ஒரு பெரிய அரச மரத்தின் நிழல் கவிந்த அந்த வீட்டில், டாக்டர் சித்தப்பாவும் அவருடைய தம்பி ராசு என்ற முத்துசாமியும், மனைவியருடன் தாயாரின் தலைமையில் கூட்டுக் குடும்பம் நடத்தி வந்தார்கள். அதே வீட்டில் கல்கி, கல்யாணம் செய்த கொண்டு வந்த புதிதில் அந்த இளைய மாமனார்களின் அன்பான வற்புறுத்தலின்பேரில் அவர்களுடைய கூட்டுக் குடும்பத்தில், கூட ஒருவராய் சுமார் ஆறு மாதகாலம் வசித்திருந்தார். கல்கியின் அந்நாள் பழக்க வழக்க நடவடிக்கைகள் பற்றிக் கொஞ்சம் சொல்லும்படி, ''தினமணி'' விளம்பர மானேஜராய் இருந்து ஓய்வு பெற்று இப்போது தியாகராயநகரில் பேரன் பேத்திகளுடன் வாழ்ந்து கொண்டிருக்கும் முத்துசாமி அய்யரைக் கேட்டபோது, ''அடேயப்பா, ஐம்பது வருஷங்களுக்கு முற்பட்ட சமாசாரம் அல்லவா!'' என்ற பெருமூச்சுடன் பீடிகை போட்டுக் கொண்டு சிலவற்றை ஞாபகப்படுத்திக் கொண்டு தெரிவித்தார்.

கிருஷ்ணமூர்த்திக்கும் முத்துசாமிக்கும் ஒரே வயது; டாக்டரும் இரண்டே வயதுதான் மூத்தவர். ஆகவே அவர்கள் மாப்பிள்ளை—மாமனார் என்ற மரியாதை முறையில் அல்லாமல் பெயர் சொல்லிக் கூப்பிட்டுக் கொண்டு வெகு சகஜமாய்ப் பேசிப் பழகுவார்கள். ஆனால், இளைய மாமியார்களும் அவர்களுடைய மாமியாரும், அந்தக் காலத்து வழக்கப்படி கல்கியிடம் மிகையான மரியாதை கொண்டு அந்த மரியாதையை மிகையான நாணத்தின் மூலம் காட்டினார்கள். அவருடனோ, அவர் எதிரிலே பிறருடனோ பேச மாட்டார்கள். நல்ல வேளையாகப் பேசும் மடந்தை ஒருத்தி அந்த வீட்டில் இருந்தாள் — முத்துசாமியின் மூன்று வயதுப் பெண் சாரதா. அத்திம்பேரின் தனி அறைக்குள் மைத்துனிக் குட்டி சாரதா அவ்வப்போது எட்டிப் பார்த்துவிட்டு, அவர் குனிந்து எழுதுவது, நிமிர்ந்து படிப்பது, சும்மா வளைய வந்துகொண்டிருப்பது, ஜன்னல் வழியே அரச மரத்தைப் பார்த்துக் கொண்டு நிற்பது போன்ற செய்திகளையும், அவருக்கு என்னென்ன வேண்டும் என்ற விவரங்களையும் அடுக்களைக்கு அஞ்சல் செய்வாள். அதே மாதிரி, ''கிணற்றடி காலியாயிருக்கு. குளிக்கலாம்'', ''சமையல் ஆயிடுத்து. சாப்பிட வரலாம்'' என்பவை போன்ற தகவல்களை அவரிடம் ஓடி வந்து அறிவிப்பாள்.

''நவசக்தி'' அலுவலகத்திலிருந்து சீக்கிரமே திரும்பி வர நேர்ந்தால், மைத்துனி சாரதாவுடன் கல்கி கொஞ்சி விளையாடுவார்; அவளுக்குக் கதைகள் சொல்லுவார்; அல்லது அவளை வெளியில் கூட்டிச் சென்று தின்பண்டங்களோ விளையாட்டுப் பொருள்களோ வாங்கிக் கொடுப்பார்.

அப்போது கல்கி அரண்மனைக்காரன் தெருவில், கோகலே மண்டபத்தில் அமைந்த ஒய். எம். ஐ. ஏ. என்ற இந்திய இளைஞர் சங்கத்தில் உறுப்பினராய்ச் சேர்ந்து கொண்டார். அப்படிச்சேர்ந்து கொண்டதற்கு இரண்டு காரணங்கள். முதல்தரமான காப்பி அதன் சிற்றுண்டிசாலையில் கிடைக்கும் என்பது ஒரு காரணம்; நல்ல நல்ல நூல்களும் எல்லா விதப் பத்திரிகைகளும் அதன் படிப்பகத்தில் இருந்தன என்பது மற்றொரு காரணம். அவை இரண்டுக்காகவும், ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் கல்கி ராசுவைக் கூட்டிக் கொண்டு செல்லுவார். சங்கத்தை அடைந்ததும் ஒரு காப்பி; திரும்புவதற்கு முன்னால் இன்னொன்று. இடையே இரண்டு மூன்று மணி நேரம் படிப்பு. படிக்கையில் தென்படும் சுவையான விஷயங்களை ''நவசக்தி''யில் போடுவதற்காகக் குறிப்பெடுத்துக் கொள்ளுவார். மகாத்மாவின் ''யங் இந்தியா'' கட்டுரைகள் சிலவற்றை அங்கே கிடைத்த பிரதிகளிலிருந்தே கல்கி மொழிபெயர்த்துக் கொண்டாராம்.

ஒரு ஞாயிற்றுக்கிழமை கோகலே மண்டபத்திலிருந்த வீடு திரும்புகையில் திரு. வி. க.வின் யோசனையின் பேரில் நவசக்தி அலுவலகத்துக்குப் பக்கத்திலேயே தாம் ஜாகை வைத்துக்கொள்ளப்போவதாக ராசுவிடம் கல்கி தெரிவித்தார். ராசுவும் அவருடைய அண்ணாவும் எவ்வளவோ தடுத்தும் கேளாமல், நாலைந்து நாட்களில் புறப்பட்டுப் போய்விட்டார்.

அவர் வீட்டில் இல்லாதது மற்றவர்களைவிட ராசுவுக்கும் அவருடைய மகளுக்கும் பெரிய குறையாக இருந்தது. ஏரிக்கரைத் தெருவில் அவர் குடித்தனம் போட்டபோது அந்தக் குறை ஓரளவு தீர்ந்தது. பின்னர் திருடன் காரண

## அமெரிக்க ஹாஸ்யம்



பிரபல நகைச்சுவை நடிகரின் நண்பர் ஒருவர் காலமாகி விட்டார். இந்த நகைச்சுவை நடிகர் அவரது சவ அடக்கத்தின்போது சில வார்த்தைகள் பேச ஒப்புக் கொண்டார். உடனே தமக்காக எழுதும் 'மறைமுக' எழுத்தாளருக்குத் தந்தி அடித்தார்: ''சில கல்லறை ஹாஸ்யங்கள் அனுப்பி வைக்கவும்!''

---

மாய்த் தங்கள் வீட்டுக்கே மீண்டும் குடிவந்தபோது அது முழுதுமாய்த் தீர்ந்தது. தன்னுடன் பேசி விளையாடுவதற்கு ஒருவருக்கு இருவராய், அத்திம்பேருடன் அக்காவும் கிடைத்ததில் சாரதாவுக்கு ஒரே ஆனந்தம்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை காலையில், எங்கே என்று சொல்லிக் கொள்ளாமல் வெளியே போய்விட்டுத் திரும்பிய கல்கியை மைத்துனி வாசல்படியில் கண்டு ஒரு கணம் திகைத்துவிட்டு, ''ஐ யை யே யா! அத்திம்பேரைப் பாருங்கோ!'' என்று சிரித்துக் கொண்டே கத்தினாள். என்னவென்று எல்லாரும் பார்த்தார்கள். கட்டுக் குடுமி இழந்து கிராப் வைத்துக் கொண்ட கோலத்தில் நின்றார் கல்கி. ''உங்களுக்கு இது நன்றாகவே இல்லை'' என்று ருக்மிணி சொன்னாள். ''பார்த்துக் கொண்டே இருந்தால், கொஞ்ச நாளில் இதுதான் அழகாய்த் தோன்றும்''என்று கணவர் சமாதானம் கூறினார். காந்தி ஆனால் பக்தராய் இருந்தும் கல்கி என்றுமே காந்திக்குல்லா அணியவில்லை.

கல்கி தம்பதியரின் அடுத்த குடிமாற்றம் மயிலாப்பூருக்கு. அப்பர்சாமி கோவில் தெருவில், சுந்தரேச அய்யர் என்ற ஒரு வக்கீல் எடுத்திருந்த வீட்டின் பகுதி ஒன்றில் வசித்தார்கள். முந்தைய இருப்பிடங்களை விட அதிக விசாலமும் வசதியும் கொண்டது அது. அதற்கு ஏற்றாற்போல் வாடகை பதினாறு ரூபாய் ஆயினும் கிருஷ்ணமூர்த்தியின் சம்பளமும் அறுபது ரூபாயாகக் கூடியிருந்ததால் அதிக வாடகையைச் சமாளிக்க முடிந்தது.

எப்படியாவது நூறு ரூபாய்ச் சம்பளத்தை எட்ட வேண்டும் என்பது அக்காலத்தில் கல்கியின் ஆசைக் குறிக்கோளாய் இருந்தது. ஆனால் நவசக்தியில் அவ்வளவு எதிர்பார்க்க வாய்ப்பில்லை. அவரை ஆசிரியராகக்கொண்டு புதிய பத்திரிகை ஒன்றை ஒருவர் போட விரும்பினார். நூறு ரூபாய் சம்பளம் தருவதாய் அவர் சொன்னார். இதைக் கல்கி ருக்மிணியிடம் தெரிவித்து அவளுடைய யோசனையைக் கேட்டபோது, ''நீங்கள் நவசக்தி முதலியாரை விட்டு விலகவே கூடாது'' என்று சொன்னாள். ''உங்களிடம் ரொம்ப அன்பாய் இருப்பதாகச் சொல்கிறீர்கள்; கூட நாற்பது ரூபாய்க்கு ஆசைப்பட்டு விலகலாமா?'' அவளுடைய பதிலில் பொதிந்திருந்த விவேகத்தைக் கல்கி மெச்சினார்: ''நீ சின்னவளாய் இருந்தும் புத்திசாலியாய் இருக்கிறாய்'' என்றார்.

அந்த அப்பர்சாமி கோவில் தெருவில் இருக்கையில், கல்கியின் வாழ்க்கையில், நவீனம், இங்கிதம், பண்பு முறைமை எல்லாம் பெருகின. ஞாயிற்றுக் கிழமை தோறும், மனைவியை உல்லாசமாய்க் கடற்கரைக்குக் கூட்டிச் செல்லுவார். ஈர மணலில் அவளுடன், காலில் அலைகளைத் தவழ விட்ட வண்ணம் வெகு நேரம் நிற்பார். அல்லது, மணற் சரிவில் சாய்ந்து கண்களை மூடியவாறு அலையோசையைக் கேட்டுக் கொண்டிருப்பார்.

ஒரு நாள் மாலை அவர் இரண்டு நண்பர்களுடன் ஒரு கட்டு மரத்தில் ஏறிச் சென்றார், மனைவி எவ்வளவோ தடுத்தும் கேளாமல். வெகு தூரம் அந்தக் கட்டுமரம் சென்றுவிட்டதைக் கண்டு ருக்மிணி தவியாய்த் தவித்தாள். அவர் திரும்பி, ஒரு பெரிய அலையின் உதவியுடன் கரை சேர்ந்தவுடன்தான் அவளுடைய தவிப்புத் தீர்ந்தது. ''இவ்வளவு ஆபத்தான காரியத்தைச் செய்யலாமா?'' என்று அவள் கேட்டாள். ''அடுத்த தடவை உன்னையும் ஏற்றிப் போகிறேன்; அப்போது ஆபத்தாய்த் தோன்றாது'' என்றார் அவர்.

மாதம் ஒரு தரம் மனைவியுடன் சினிமாவுக்குப் போவார். எட்டணாக் கட்டணத்தில் முதல் வகுப்பு நாற்காலியில்தான் உட்காருவார். அதிலெல்லாம் செட்டுக் கிடையாது.

சனிக் கிழமைகளில் இராமகிருஷ்ண மடத்துக்குப் போய், அங்கே பிரம்மச்சாரியாய் இருந்த பால்ய நண்பர் முத்துக்கிருஷ்ணனுடன் பேசிக் கொண்டிருப்பார். பிறகு அந்த மடத்தில் நடக்கும் பஜனையைக்கேட்டுவிட்டு, தேங்காய், பூர்ணம் பிரசாதத்தைவாங்கிக்கொண்டு வந்து மனைவிக்குக் கொடுப்பார்.

அல்லது ''நவசக்தி'' சகா, சாமிநாத சர்மா மாம்பலத்தில் நடத்தி வந்த தேசிய பஜனைக்குப் போய் வருவார். அங்கே கல்கி, பாரதி பாடல்களைப் பாடுவதும் சில சமயம் அதற்கு விளக்கம் தருவதும் உண்டு.

அப்பர்சுவாமி கோயில் தெரு வீட்டில்தான் முதன் முதலாக ராஜாஜிக்கு விருந்தளிக்கும் பாக்கியத்தைக் கல்கி தம்பதியர் அடைந்தனர். பி. ஸ்ரீ.

"ஆம்! நரசுஸ் காபியேதான்!
ஒன்று என்ன இரண்டு கப்
சாப்பிடுங்களேன்!"



# நரசுஸ் காபி

எந்த இடத்திலும், எந்நேரத்திலும்
விரும்பிச் சாப்பிடத் தூண்டுவது

**நரசுஸ் காபி!**

"தெர்மலோ"
முறையில் தயாரிக்கப்படும்
ஒரே காபி!

நரசுஸ் காபி கம்பெனி
சேலம்-636007

கிளைகள் : பாண்டிச்சேரி மற்றும் தமிழகமெங்கும்

EP-NC-4

# பட்டு மற்றும் செயற்கையிழைத் துணிகளின் மென்மைச் சலவைக்கு அவசியம் 'ஜெண்டீல்'




பட்டு மற்றும் செயற்கையிழைத் துணிகள்—'டெரீன்', நைலான், ரேயான் போன்றே மென்மையானவை. இவற்றை விசேஷ முறையில் சலவைச் செய்வதற்கு அவசியம் தேவை ஜெண்டீல் ஒன்றே ஆகும். உங்கள் பட்டாடைகள் மற்றும் செயற்கையிழைத் துணிகளின் நெசவு நயத்தையும் பளபளப்பையும் பாதுகாப்பது ஜெண்டீல். உங்கள் மனங்கவர் பட்டு, செயற்கையிழை, கம்பளியாடைகளைச் சலவை செய்திட விசேஷ முறையில் உருவாக்கப்பட்டது ஜெண்டீல். ஜெண்டீல் துணிகளிலுள்ள அழுக்கை விரட்டித் தூய்மையான சலவை செய்கிறது. உங்கள் துணிகள் மென்மை, புதுமையுடன் பளிச்செனத் திகழச் செய்கிறது. உங்கள் மென்மைத் துணிகளான புடவை, உள்ளாடை, சட்டை, கால்சட்டை, டைகள், கம்பளி ஆடைகளை ஜெண்டீலைக் கொண்டு மனையிலேயே பத்திரமாகச் சலவை செய்யுங்கள்.

# ஜெண்டீல்

**மென்மையான துணிகளை மனையிலேயே பத்திரமாகச் சலவை செய்யும் சாதனம்**

Shilpi DM-6-74 Tam

ஆசாரியாவும் அவருடைய சகோதரர் மகரபூஷணமும் அந்த வீட்டில் உணவருந்தியவர்கள்.

முன்னால் அறிவிக்காமலே இரண்டு மூன்று விருந்தாளிகளைக் கல்கி கூட்டி வந்துவிடுவார். ''இவர்களுக்கெல்லாம் இங்கேதான் சாப்பாடு'' என்று சொல்லுவார். மனைவி ஜாடை காட்டி அவரைக் கூப்பிட்டு, ''இப்படித் திடீரென்று சொன்னால் எப்படிச் சமைப்பது?'' என்று கேட்பாள். ''மூன்று அடுப்புக்களை வரிசையாக மூட்டிச் சமையல் செய்தால் போச்சு'' என்பார் அவர். ''என்ன சமைப்பது'' என்று கேட்டால் ''எது இருக்கிறதோ அதைக் கொண்டு சமை'' என்று சொல்லிவிட்டுப் போய் விடுவார். இப்படித் திடீர் விருந்தாளிகளைச் சமாளிக்கும் சங்கடத்தை அவர் நெடுகிலும் கொடுத்துக் கொண்டிருந்தாராம்.

ஒரு நாள் அவர் சில புத்தகக் கட்டுகளுடன் ஒரு ஜட்காவில் வந்து இறங்கினார். அந்தக் கட்டுக்களை அவர் வீட்டுக்குள் தூக்கி வந்து ஒரு பெஞ்சின் மேல் அடுக்கி வைத்தார். அவை யாவும் அவர் சொந்தச் செலவில், ''ராயல் பிரிண்டிங் வொர்க்ஸ்'' அச்சுக்கூடத்தில் அச்சடித்து வாங்கி வந்த 'சாரதையின் தந்திரம்' புத்தகத்தின் பிரதிகள். ''இதுதான் நான் போட்டிருக்கிற கதைப் புத்தகம்; எப்படி இருக்கிறது பார்'' என்று சொல்லி ஒன்றை எடுத்து மனைவி கையில் கொடுத்தார்.

ஆவலுடன் அதை அவள் புரட்டிப் பார்த்துவிட்டு, முகப்புப் பக்கத்தை வாய் விட்டுப் படித்துப் பார்த்தாள்:

*சாரதையின் தந்திரம் முதலிய கதைகள் — சத்திய சோதனை மொழிபெயர்ப்பாசிரியரான ரா. கிருஷ்ணமூர்த்தி எழுதியவை — ஸரஸ்வதி பிரசுராலயம், மயிலாப்பூர், சென்னை—1927.*

''இந்தச் சரஸ்வதி பிரசுராலயம் எங்கே இருக்கு?''

''நம்ம வீடுதான் பிரசுராலயம்.''

''இதன் விலை என்னன்னு போடவில்லையே!''

''அடே. கண்டு பிடிச்சுட்டையே! விலை முக்கால் ரூபாய். அச்சடிக்க விட்டுப்போச்சு.''

மறு நாளே, ''சரஸ்வதி பிரசுராலயம்'' என்று எழுதிய பலகை ஒன்றுடன் அவர் வீட்டுக்கு வந்தார். மனைவியிடம் அதைக் காட்டிவிட்டு, வாசல் முகப்பில் வக்கீலின் பலகைக்கு அடியில் அதை ஆணி அடித்து மாட்டினார்.

மாலையில் நீதி மன்றத்திலிருந்து திரும்பிய வக்கீல் சுந்தரேச அய்யர் சட்ட விதிகளை எடுத்துச் சொன்னார்.

''சரஸ்வதி பிரசுராலயம் என்றால் அது ஒரு கம்பெனியைக் குறிக்கும்; எப்போது அது ஒரு கம்பெனியைக் குறிக்கிறதோ, அப்போது அதை முறைப்படி பதிவு செய்திருக்க வேண்டும். எப்போது அதைப் பதிவு செய்யவில்லையோ அப்போது அதன் பெயர் எழுதிய போர்டை மாட்டக் கூடாது!''

நாலு நாட்களுக்குப் பிறகு, அந்தச் சட்ட விரோதமான பலகையைக் கல்கி கழற்றி உள்ளே வைத்து விட்டார்!

(தொடரும்)

## நான் வணங்கும் மனித தெய்வம்!

எத்தனையோ பல இல்லங்களில் பூஜை அறைகளில் தெய்வப் படங்களைத் தவிர அவர்கள் வணங்கும் ஒரு மனித தெய்வத்தின் படத்தையும் காண்கிறோம். எந்தக் காரணத்துக்காக அந்தப் பெரியவரைப் பூஜை அறையில் வைத்திருக்கிறீர்கள் என்பது குறித்து நேயர்களைக் கல்கியில் இரண்டு பக்கங்களுக்கு மேற்படாத வகையில் கட்டுரை எழுதுமாறு கோருகிறோம். சிறந்த முறையில் எழுதப் பட்ட பன்னிரண்டு மனித தெய்வங்களைப் பற்றிய கட்டுரைகள் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படும். கட்டுரையுடன் மறவாமல் நீங்கள் வணங்கும் மனிதத் தெய்வத்தின் புகைப்படத்தையும் அனுப்பி வைக்கக் கோருகிறோம். பிரசுரமாகும் புகைப்படம், கட்டுரைகளுக்கு வழக்கமான சன்மானம் தவிர கல்கி விநாயகர் திருவுருவம் தாங்கிய வெள்ளிப் பதக்கப் பரிசும் உண்டு.

உறையின் மேல் ''மனித தெய்வம்'' என்று குறிப்பிடவும். பிரசுரத்துக்கு ஏற்கப் படாதவற்றைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகள் அனுப்ப வேண்டும். முடிவு தேதி: பிப்ரவரி 28. கடிதப் போக்குவரத்து கிடையாது.

**ஆசிரியர், கல்கி,**
**சென்னை — 600031.**



# ஒரே ஒரு தாரம்...

**மை** காட்! கஸ் இஸ் ட்ரூ? சுஜா, நீயா விவாகரத்து கோரி வக்கீல் நோட்டீஸ் அனுப்பி யிருக்கிறாய்?

பேனாவைக் கையில் எடுத்து ஒரே ஒரு கையெழுத்துப் போட்டு விட்டால் வெகு சுலபமாக நீ யாரோ, நான் யாரோவாக எட்ட' முடியாத துருவங்களாகிப் போய் விடலாம்.

அதற்கு முன், இந்த நிமிஷத்தில் மனம் மாறிவிட்ட நிலையில் சில விஷயங்களை எடுத்துச் 'சொல்ல ஆசைப்படுகிறேன் — கேட்பாயா, சுஜா?

உன்னை அசிங்கமான வார்த்தைகளால் துளையிட்டு, வீட்டை விட்டு — என்னை விட்டு— போகச் செய்தேனே, அது நடந்தது பத்து நாட்கள் முன்புதானே! பேயாட்டம் போட்டு உன்னை இழந்த மறுநாள் உண்மையை அறிய நேர்ந்தபோது, உண்மையாகவே நான் மாறத் தொடங்கினேன் என்றால் நம்புவாயா, சுஜா? நீ அருகில் இருக்கும்போது உன்னிடம் எரிந்து விழுந்து, சிடுசிடுத்த பாவி மனம், இன்று மட்டும் 'சுஜா இல்லாமல் எனக்கு வாழத் தெரியாது. எனக்கு அவளைக் கொடு' என்று கூக்குரலிடுகிறதே — இது ஏன்?

அன்றிலிருந்து, இன்றுவரையில் நடந்ததை யெல்லாம், ஆங்காங்கு நான் போட்ட தப்புக் கணக்குகளை யெல்லாம் உன்னிடம் மனம் விட்டு, வெட்கம் விட்டுச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

நான் வேலை பார்க்கும் இடத்திலேயே வேலை பார்த்த புஷ்பாவை நான் காதலித்தேன். இன் அதர் வோர்ட்ஸ் அதுதான் காதல் என்று நம்பிக் கொண்டிருந்தேன். சாதி வேற்றுமையால் புஷ்பாவை மணக்க அப்பா, அம்மா மறுத்தனர்.

''என் சொத்து வேணும்னு நாங்க பார்த்த பொண்ணைக் கல்யாணம் பண்ணிண்டு குடித்தனம் நடத்து. இல்லேன்னா பிள்ளையே பொறக்கலேன்னு நாங்க தலை முழுகிடறோம்!''

அப்பாவின் சொத்து என்னை வென்றது. முகத்தைத் தூக்கிக் கொண்டு உன்னைக் கைப்பிடித்தேன், இல்லையா, சுஜா?

வலுக்கட்டாயமாக மாட்டிவிட்ட பெண் என்ற கோணத்திலிருந்தே உன்னை நான் கண்டதால் என் எரிச்சல் அத்தனையும் சுமக்க வேண்டியவளாகிப் போனாய் நீ.

பெற்றோரிடம் இருந்தால் என் கோப தாபங்களை உன்னிடம் அள்ளிக் கொட்ட முடியாது என்ற ஒரே காரணத்தால்தான் உன்னுடன் தனிக் குடித்தனம் வைத்தேன். அது உனக்குப் புரிந்திருக்குமோ என்னவோ?

ஆபீசில் புஷ்பாவைப் பார்க்கும்போதெல்லாம் - அவளிடம் மனசைப் பறி கொடுத்து விட்டு சக நண்பர்கள் பெருமூச்சுடன் அவளைச் சுற்றும்போதெல்லாம் என் இதயம் எரிந்து போகும். இவளை அடைய முடியாமல் செய்தவள் சுஜாதானே என்ற வெறி எழும்.

பிறகென்ன?

அவலை நினைத்து உரலை இடித்த கதைதான்.

எத்தனைக் கெத்தனை உன்னிடம் குதிப்பேனோ, அத்தனைக்கத்தனை ஆபீசில் புஷ்பாவிடம் நாயாய்க் குழைவேனே — அதை நினைத்தால் சத்தியமாய் எனக்கு இப்போது குமட்டுகிறது, சுஜா.

கல்யாணமான பிறகும் எங்கள் உறவு நீடிப்பதற்காக என்னவெல்லாம் செய்திருக்

கிறேன்! ஓ, காட்! ஹௌ மச் ஐ ஹாவ் ஸ்பெண்ட் ஆன் ஹெர்?

அவளைக் கைவிட்டு விட்டு உன்னைக் கைப் பிடித்த முதல் பல நாட்கள் என்னை எதிரிட்டுக் கூட அவள் பார்க்காதபோது என் மனம் நொறுங்கிப் போனதாகவே நான் நினைத்துக் கொண்டேன்.

''அப்பா தற்கொலை செய்துகொள்வதாக மிரட்டினார் புஷ்பா'' என்பேன்.

'என் தாயார் 'ஹார்ட் பேஷண்ட்' என்பேன்.

'மை வொய்ஃப் ஈஸ் ஃபிரிஜிட்' என்பேன் இன்னொரு நாள் கண்ணீர் மல்க. எதிர் பார்த்த பலன் கிடைத்தது. புஷ்பாவின் உறவு எனக்கும், என் பணத்தால் நான் வாங்கித் தந்த பரிசுகள் அவளுக்கும் மீண்டும் கிடைத்தன.

இப்பொழுது நினைத்துப் பார்க்கிறேன்.—புஷ்பாவை விட எந்த விதத்தில் பார்த்தாலும் நீ நூறு, இல்லை பல நூறு மடங்கு உயர்ந்தவள் என்பது புரிகிறது.

நீ கவர்ச்சியானவள். படித்தவள். வேலையில் இருந்தவள். வீட்டு நிர்வாகத்தில் தேர்ந்தவள். எல்லாவற்றையும் விட நீ கணவனுக்கு அடங்கினவள்—வீட்டையும் என்னையும் நன்றாகக் கவனிக்க வேண்டும் என்று இருந்த நல்ல வேலையையும் விட்டுவிட்டாய்.

தூங்கி எழுந்து ஆபீசுக்குப் போகும்வரை உன்னிடம் எப்படி நடந்து கொள்வேன்.—உன்னை ஓர் இதயமுள்ள மனுஷியாக என்றாவது நடத்தியிருக்கிறேனா? வீட்டு வேலைகளில் தான் ஒரு துரும்பை எடுத்துப் போடவில்லை



நான் — வெளிவேலைகளிலாவது கை கொடுத்திருக்கிறேனா? ரேஷன், மளிகை, பால், கூப்பன், வாடகை, எல்லாவற்றுக்கும் நீதானே?

'என் நண்பர்கள் விருந்துக்கு வருகிறார்கள்— நான்கு பேர் — தடபுடலாய் இருக்கணும்'

ஹோட்டல்காரனிடம் சொல்லிவிட்டுப் போவதைப் போல் நிச்சிந்தையாய் நான் போய்விடுவேன். மாலையில் வந்தால் இலை போட்டு, கை கழுவத் தண்ணீர் எடுத்து வைத்திருப்பாயே !

'கொடுத்து வைத்தவன்டா !' 'என்னமாய் மணக்கிறது, சமையல்' என்று நண்பர்கள் புகழ்வதை மட்டும் நான் எடுத்துக் கொள்வேன், என்னையே புகழ்ந்த மாதிரி?

புஷ்பாவை அடைய முடியாமல் செய்ததற்காக உன்னை வெறுத்தவன், நீ சமைத்ததை உண்ணாமல் இருந்தேனா. நீ தோய்த்துக் கொடுத்த சட்டையைப் போடாமல் இருந்தேனா, இல்லை, உன்னை அனுபவிக்காமல் தான் இருந்தேனா? ஒன்றுமில்லை. — இதுதான் சுஜாதா — நம் நாட்டில் பல ஆண்களுக்கு உள்ள குணம். பத்துக் குழந்தைகளை மனைவி மூலம் பெற்றிருப்பான். இரண்டாவதாகக் கவர்ச்சியான எவளையோ சுற்றுவான். 'ஏன்' என்று கேட்டால் 'ஐ டோன்ட் லவ் மை வொய்ஃப் — அவளுக்கு என்னைப் புரிந்து கொள்ளத் தெரியவில்லை' என்று பெண் மாதிரி அழுது அங்கலாய்ப்பான். நானும் இப்படித் தானே இருந்தேன் — என் அவசியத்துக்காக நீ — ஆசைக்காகப் புஷ்பாவென்று.

ஒரு நாள் என் அப்பா நம் வீட்டுக்கு வந்திருந்தார். — என்னைப் பற்றி உன்னிடம் ஏதோ சொன்னார் போலும் — வெளியே போய்விட்டு எட்டு மணி சுமாருக்கு வீடு திரும்பிய என் காதில் நீங்கள் பேசினது விழுந்தது.

''வாசுவைப் பற்றி உனக்குத் தெரியாததில்லை— இள ரத்தம் — கொஞ்சம் அடக்கிப் பாரும்மா.''

நீ மெல்லச் சிரித்தாய். ''அவர் நிதானமுள்ளவர் அப்பா, அவருக்கு எதுவும் நான் சொல்லித் தெரியணும் என்பது இல்லை.'' எனக்கு உன் பதில் சந்தோஷத்தை அளித்தது. 'தேவலை, எனக்கு நல்ல கவரேஜ்' கொடுக்கிறாள் என்ற தைரியமும் உண்டாயிற்று.

நாளாக ஆக புஷ்பாவுக்கு என்னிடம் அலுத்து விட்டது போலும். வேலையை விட்டு விட்டு ஒரு வடக்கத்திக்காரனை மணந்து கொண்டு நல்ல நாளில் போயே போனாள். 'ஷி டிஸர்ட்டட் மி' என்ற ஆத்திரம் என்னுள் எழ, பல நாட்கள் ஒழுங்காகவே நான் நடந்து கொள்ளவில்லை இல்லையா?

கண்டபடி சுற்றிவிட்டு நான் வந்த அந்த நாள் உனக்கு நினைவிருக்கிறதா சுஜா?

'மனசு துணிவில்லாதவர்கள் காதலிக்கக் கூடாது — காதலித்த பெண்ணைக் கைவிட்டு விட்டு இன்னொரு பெண்ணின் வாழ்க்கையையும் ஏன் குட்டிச்சுவர் பண்ணணும்?' என்று நான் என்னவெல்லாமோ பேசின பிறகு நீ கேட்டாய். என்னை அவமானப் படுத்திவிட்டதாக நான் உணர்ந்து அன்று உன்னை அடித்தேன், இல்லையா?

நமக்குக் குழந்தை பிறக்கவில்லை என்று என் பெற்றோருக்குக் குறை. ''நம்ம வம்சம் வளர வேண்டாமா?'' என்று அம்மா ஒரு முறை என்னிடம் குறைப்பட்டுக்கொண்டாள்.

''மலடியாகப் பார்த்து நீங்கள்தானே என் தலையில் கட்டினீர்கள்'' என்று அம்மாவின் வாயை அடக்கினேன்.

நாட்கள் ஓடின — நம் நிலையை என் அப்பா தெரிந்து கொண்டார் என்றே நினைக்கிறேன். இல்லாவிட்டால் திடீரென்று ஒரு நாள் வந்து, ''சுஜா, முன்னே வேலை பார்த்த ஆபீஸ் டைரக்டரை — அதான் பார்த்தசாரதி — என் சிநேகிதன் — பார்த்தேன் — சுஜா மாதிரி ஒரு பி. ஏ., கிடைக்காமல் கஷ்டமாயிருக்குன்னான்—ஏன் வாசு? நம்ப சுஜாவுக்கும் பொழுது போகமாட்டேங்கறதே — பழகின இடம். வேலைக்குத்தான் போகட்டுமே?'' என்றார். அப்பாவிடம் என்றைக்கு நான் எதிர்த்துப் பேசியிருக்கிறேன்? மோர் ஓவர் ஐந்நூறு ரூபாய் பணம் மாசா மாசம் வரும் என்பதும் சந்தோஷத்தை அளித்ததே !

நீ வேலைக்குப் போனாய் —

'வேலைக்குப் போகிற கர்வமா!' என்று மடக்கி உன்னைக் கேட்க வேண்டும் என்று நானும் கண்ணில் விளக்கெண்ணெய் விட்டு அலைந்ததுதான் மிச்சம். நீ கெட்டிக்காரி தான் — வீட்டையும் நிர்வகித்து, ஆபீஸிலும் எப்படியோ நல்லபேர் வாங்கிக் கொண்டாய்.

மூச்சுவிட நேரமில்லாமல் நீ உழைக்கும் போது, என்னுள் சில சமயங்களில் உன்னை இன்னும ஆட்டி வைக்கக் குரூரமான எண்ணம் தோன்றும் — அப்படி ஆட்டி வைத்துத் துன்புறுத்தியும் இருக்கிறேன். ஆனால் நீ முகம்கூடச் சுளிக்கமாட்டாய்.

இப்படியெல்லாம் என்னைப் புரிந்து கொண்டு, எனக்கு விட்டுக் கொடுத்துக் கொண்டு, இருந்த நீ என்னை விட்டுப் போகும்படி ஆன தினத்தை நினைத்தால், அன்று பதறாத மனம், இன்று பதறுகிறது சுஜா—

அன்று வியாழக் கிழமை. மாலை மணி ஐந்து இருக்கலாமா? இருக்கலாம்—மைலாப்பூர் பக்கமாய் வேலையாய் ஸ்கூட்டரில் போனவன் எதேச்சையாய் நாலு வண்டி முன்னால் போய்க் கொண்டிருந்த பச்சை ஃபியட்டைப் பார்த்தேன்.

உன் டைரக்டர் வண்டி — அவர் வண்டியை ஓட்ட நீ அருகில் இருந்தாய் — டைரக்டர் ஐம்பது வயதுக்காரர் — தாரமிழந்தவர்.

குரங்கு மனமாயிற்றே, சும்மா இருக்குமா?

டைரக்டர் வண்டியில் இவளுக்கு என்ன வேலை? மைலாப்பூருக்கு டவுனிலிருந்து ஏன் வந்தாள்? மாம்பலத்தில் இருக்கும் வீட்டுக்குப் போகாமல்? இப்படி —

இரவு நீயாகச் சொல்வாய் என்று இருந்தேன் — ஆனால் நீ வாயே திறக்கவில்லை — வழக்கமான அன்பு, பரிவு, புன்முறுவல் —

என்னுள் குறுகுறுப்பு — என்ன? என்ற ரீங்காரம் —

மறு நாள் காலை இன்ஸ்பெக்ஷனுக்கு வெளியில் போனவன் வேலையில் நாட்டம் இல்லாமல் உன்னிடம் ஏதாவது பேச எண்ணி உனக்கு போன் பண்ணினேன் —

''மிஸஸ் வாசுதேவன் இன்னிக்கு லீவுங்க — காலையில வந்தாங்க — அப்புறம் லீவு போட்டுட்டுப் போயிட்டாங்க...!...''

## வாய்நாற்றம் உங்களை விலகி நிற்கச் செய்கிறது...

## கால்கேட் ஒன்று சேர்க்கிறது

COLGATE
DENTAL CREAM

DC-G 50 TM(R)

## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத அளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் கிளர்ச்சிமிக்க பெப்பர்மின்ட் சுவையினால்— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

வெண்மையான
பற்களையும் ஆரோக்கி-
யமான ஈறுகளையும் தூய்மை-
யான இனிய மூச்சையும் பெற்றிடவே
கால்கேட் டூத் பிரஷ்களை
உபயோகியுங்கள்! உங்கள்
குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும்
ஏற்றவாறு அமைப்பு—
16 ரகங்கள்.

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும்விட,**
**கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**



''மேஜை டிராயர் சாவியைக் காணோம். லாக்கப்பில் இருக்கும் கேடியிடம் ஒரு கம்பியைக் கொடுத்தனுப்பு.''

வீட்டுக்குப் போனேன் — உன் நிழல்கூட அங்கு இல்லை.

சந்தேக மனசு 'என்னவோ, இதில் என்னவோ?' என்று பறந்தது. விதி வேலை செய்தது. டிரைவ்-இன் ஹோட்டலில் டிபன் சாப்பிடச் சென்றவன் எட்வர்ட் எலியட்ஸ் சாலையில் பெரிய ஹோட்டல் ஒன்றிலிருந்து வெளியே வந்த பச்சைப் பியட்டைப் பார்த்தேன். அசிங்கம் பிடித்த என் மனத்துக்கு அசிங்கமாகத்தானே எண்ணத் தெரியும் !

வீட்டுக்கு வந்த உன்னிடம், ''என்ன பத்தினிப் பெண்ணே — ஹோட்டல் அறை எப்படி? சௌகரியமாக இருந்ததா ? டைரக்டர் எப்படி?'' என்று கேட்டேன். ஒவ்வொரு வார்த்தையும் சேற்றில் தோய்ந்து அசிங்கமாய் வந்து விழுந்தது.

என் கோணத்திலிருந்து, நான் செய்ததை கலையே நிறுவுகோலாகப் பயன்படுத்தி உன்னையும் எடை போட்டுவிட்டேன் இல்லையா, சுஜா ?

இஷ்டத்துக்குக் கத்திவிட்டு வெளியே போய்விட்டேன் — நடு ஜாமத்துக்கு மேல் வந்தபோது வீட்டில் நீ இல்லை.

'' ஒழியட்டும் கழுதை !'' என்றுதான் இருந்தேன் — மறு நாள் மாலை வரை —

இருள் மங்கும் நேரத்தில் உன் டைரக்டர் வந்தார்-''ஏன் சுஜா ஆபீசுக்கு வரலே?''என்று சுவாதீனமாய்க் கேட்டு அமர்ந்தவர், ''சுஜா மூலமாத்தான் இன்னிக்கு என் குடும்பத்துக் கௌரவம் பிழைச்சதுப்பா, உன்னிடம் சுஜா நேத்து சொல்லி யிருப்பாளே — வீட்டை விட்டு ஓடிப் போய் ஹோட்டலில் தங்கின என் பெண்ணை சுஜாதான் சமாதானப்படுத்தி வீட்டுக்குக் கூட்டிண்டு வந்தாள். தான் தவறிவிட்டோம், காதலன் ஏமாத்திட்டான் என்ற துக்கத்தில் தூக்க மாத்திரைகளைப் போட்டுண்டு என்னைப் பார்க்கக்கூட மறுத்தவளை, சுஜாதான் ஆபீசுக்கு லீவு போட்டுட்டு, கூட பிறந்த அக்கா மாதிரி தேற்றி, டாக்டரிடம் அழைச்சண்டு போயி.... நல்லபடியா என்னையும், என் மகளையும் ஒண்ணு சேர்த்தான்... சுஜா எனக்கு அஸிஸ்டெண்ட் இல்லை, — மூத்த பெண்...'' என்றார். உன் டைரக்டர் பேசப் பேச எனக்கு எப்படி இருந்தது தெரியுமா ?

நான் எவ்வளவோ தவறுகள் பண்ணியிருக்கிறேன். ஆனால் சிகரம் வைத்தது போல் செய்தது உன்னிடம் யோசிக்காமல், மட்டமாய்ப் பேசியதுதான் சுஜா — இன்னொருத்தியாக இருந்தால் டைரக்டரின் பெண்ணைப் பற்றி வண்டி வண்டியாய் வம்பு பேசியிருப்பாள். ஆனால் நீ என்னிடம்கூட ஒரு வார்த்தை கூற வில்லை. எவ்வளவு உயர்ந்த பண்பு உனக்கு !

''ஆமாம், நான்பாட்டுக்கு என் சமாசாரத்தையே பேசறேனே — 'ஏன் வாகரிஸல்ட் வந்ததா? என்னாச்சு?' உன் டைரக்டர்தான் இப்படி கேட்டார். நான் திகைத்தேன்.''

'' என்ன ரிஸல்ட் ?''

நீ வியாழனன்று மைலாப்பூரில் உள்ள லேடி டாக்டரிடம் கன்ஸல்டிங்குக்குப் போனதையும் — டைரக்டர் அங்கு வேலையாய் வந்தவர் காரில் உன்னை இறக்கினதையும் சொன்னார். அவரிடம் என்னவோ சொல்லி மழுப்பி அனுப்பிவிட்டு அவர் சொன்ன டாக்டரிடம் ஓடினேன் —

உன் ரிப்போர்ட்டின் டூப்ளிகேட் காப்பி எடுத்துப் படித்தார் டாக்டர் — நீ இரண்டு மாசம் கர்ப்பமாகி இருப்பதைச் சொன்னார்!

சுஜா, அந்த வினாடியில்தான் உன்னை நான் எவ்வளவு காதலிக்கிறேன், நீ எனக்கு, என் வாழ்க்கைக்கு எத்துணை அத்தியாவசியமானவள் என்ற உண்மை மின்னலாய் என்னுள் இறங்கியது. உன்னைப் பார்க்க உன் அண்ணன் வீட்டுக்கு ஓடினேன் —

'கெட் அவுட் — யூ ப்ரூட் — உன்னைப் பார்த்துக் கொள்ளும் விதத்தில் பார்த்துக் கொள்வான்' என்று சொல்லி உள்ளே விடக் கூட மறுத்து விட்டார்.

உன் அண்ணா சொன்னதை நிறைவேற்றி விட்டார். இன்று நோட்டீஸ் வந்துவிட்டது—

ஒரு நல்ல கணவனாக நான் இல்லாததால்—என் கையை என்றுமே எதிர்பார்க்காததால் நான் இல்லாமல் உன்னால் வாழ முடியுமோ என்னவோ! ஆனால் உன்னையே சர்வத்துக்கும் நம்பி வாழ்ந்துவிட்ட என்னால் உன்னைவிட்டு இருக்க முடியாது சுஜா — .

வீட்டில் இருக்கும்போது என் கண்ணில் கூட நிற்காத நீ, அருகில் இல்லாத இன்று விசுவரூபம் எடுத்து நம் வீட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும், என் தேகத்தின் ஒவ்வோர் அணுவிலும், என் மனசிலும் பரவி நிற்கிறாய்—

சுஜா — பிறக்கப் போவது மகளாக இருந்தால் நான் இல்லாமலே நீ சுலபமாய் வளர்த்து விடுவாய் — ஆனால் என்னைப்போல் ஒரு முரட்டு மகனாய் இருந்தால் ஒரு தகப்பன் இல்லாமல் உன்னால் வளர்க்க முடியுமா சுஜா?

அவனுக்கு மெகானோ செட்டில் கிரேன் செய்ய, விசில் அடிக்க, கிரிக்கெட் விளையாட எல்லாம் உன்னால் சொல்லிக் கொடுக்க இயலுமா, சுஜா —

சுஜா — என் சுஜாதா -- ஐ லவ் யூ —

மிருகமாய் ஆட்டம் போட்டவன் இன்று அன்பு நிறைந்த மனிதனாய் மாறி உன்னிடம் அன்புப் பிச்சை கேட்கிறேன்.

விவாகரத்து நோட்டீஸைக் கிழித்துப் போட்டுவிட்டு, உனக்கு நல்ல கணவனாக, நம் பிள்ளைக்கு நல்ல தகப்பனாக வாழ்ந்து காட்ட ஒரே ஒரு தரம் சந்தர்ப்பம் அளிப்பாயா சுஜா ? — ஒரே ஒரு தரம்....

## தலைவர் தரிசனம்

# 1 காமராஜ்

**சொல்பவர்: என்.எம். மணிவர்மா.**

**1956**-57ல் ஒரு நாள். எனக்குத் தேதி சரியாக நினைவில்லை. பச்சையப்பன் கல்லூரி, சட்டக் கல்லூரி முதலியவற்றில் படிப்பை முடித்துக் கொண்டு வழக்கறிஞராகத் தயாராகிக் கொண்டிருந்த நேரம். ஏற்கனவே மாணவர் காங்கிரசில் நிறைய ஈடுபாடு உண்டு. ஆதம்பாக்கம் திரு ராமகிருஷ்ணய்யருடன் இணைந்து காங்கிரஸ் அமைப்பில் பணி புரியும் வாய்ப்புக் கிட்டியிருந்தது. திரு ராமகிருஷ்ணய்யர்தான் என்னைத் திருமலைப்பிள்ளை

திரு மணிவர்மாவின் மனைவி, மகளுடன் திரு காமராஜ்.

தெருவுக்கு அழைத்துச் சென்று திரு காமராஜரிடம் அறிமுகப்படுத்தி வைத்தார். அன்று தான் முதல் தடவையாக என் தலைவரை நெருங்கி அவருடன் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவரை என் தலைவராக அந்தக் கணத்திலேயே ஏற்றுக் கொண்டு இதயத்தில் இடம் கொடுத்து விட்டேன்.

அதே நேரத்தில் நான் பெரிய ஏமாற்றத்துக்கும் ஆளானேன் என்பதை ஒப்புக் கொண்டுதான் ஆக வேண்டும்! ஆம்! நான் திரு காமராஜ் அவர்களைப் பற்றிக் கற்பனை செய்து வைத்திருந்ததற்கும் அவரை நேரில் கண்டு பேசிப் பழகியபோது கிடைத்த உண்மை அனுபவத்துக்கும் இடையேதான் எத்தனை பெரிய இடைவெளி! சிறுவனான என்னைச் சரிசமமாக மதித்து அவர் பேச ஆரம்பித்த போது நான் அயர்ந்துதான் போனேன்! இத்தனை எளிமையாக, எந்தவித வித்தியாசமும் பாராட்டாமல் பழகும் இவரை, உயரே நின்று கீழே அலட்சியமாகப் பார்வையை வீசும் நபராகக் கற்பனை செய்திருந்தோமே என்று எண்ணி உள்ளூற வெட்கப்பட்டுப் போனேன்!

நான் வேறு ஏதும் அரசியல் கட்சியிலிருந்து அனுபவம் பெற்றுப் புதிதாகக் காமராஜ் அவர்களை நாடியவன் இல்லை. தேசப் பணியிலும் சுதந்திரப் போராட்டத்திலும் ஈடுபட்டிருந்த பாரம்பரையில் தோன்றியவன் நான். என் தந்தை தியாகி என். ஆர். மாணிக்க நாயகர் 1933ம் ஆண்டிலேயே ஆறு மாத சிறைத் தண்டனை பெற்றுப் பெல்லாரி ஜெயிலில் இருந்தவர். பெல்லாரிக்கு மாற்றப்படு முன் அவர் வாலாஜாப்பேட்டை சப்ஜெயிலில் இருந்தபோது என் பாட்டியார் என்னைத் தூக்கிக் கொண்டு போய் என் தந்தைக்குக் காண்பித்தார். அப்போது பார்த்த என் தந்தையின் முகம் இன்றும் அப்படியே என் நினைவில் நிற்கிறது. இவ்வாறு ஒரு தேசிய பரம்பரையில் வந்தவன் என்ற வகையில், காமராஜ் அவர்களை நான் சந்தித்த விநாடியிலிருந்து என் தலைவராக ஏற்றுக் கொண்டு விட்டேன்!

காமராஜ் அவர்களைப் பார்த்தால் ரொம்பக் கடுமையான இறுகிய மனம் உள்ளவர் போலத்தான் தோன்றும். ஏன் இப்படிச் சிடுசிடுப்பாக இருக்கிறார் என்றுகூட நினைக்கத் தோன்றும். ஆனால் இந்தக் கடுமை சுபாவத்தை அவர் சிரமப்பட்டுத் தம் மேல் போர்த்திக் கொள்கிறார். உள்ளூற ரொம்ப ரொம்ப இளகிய மனிதர். குழந்தை சுபாவம். யாராவது அவரிடம் வந்து தம் கஷ்டங்களைச் சொல்லி அழ ஆரம்பித்தால் அவர் சகிக்கமாட்டார். அவர் மனமும் உள்ளூற இளகிப் பாகாய் ஓடும். ஆனால் அதை வெளியே காட்டிக் கொள்ள விரும்பாமல் சீறி விழுவார். ஒன்று வந்தவர்களை, "சரி, சரி! போதும்! நீங்க போயிட்டு வாங்க!" என்று விரட்டுவார். அல்லது "சரி சரி! நான் போறேன்" என்று எழுந்துவிடுவார். தம் மனத்தில் எழும் அனுதாபத்தையும் வேதனையையும் மறைக்க அவர் இந்த 'இரும்புக் கவச' நடிப்பை மேற்கொள்கிறார் என்பதை அவரை நன்கு புரிந்து கொண்டவர்கள் அறிவார்கள்.

இவர் எத்தனையோ பேர்களுக்கு நிறைய உதவிகள் செய்கிறார். ஆனால் காலத்தால் செய்த அந்த உதவி, செய்த இவருக்கும், பெற்றுக் கொண்ட மற்றவருக்கும்தான் தெரியுமே தவிர, வேறு யாருக்கும் தெரியாது. அதைப் பற்றி அப்புறம் பேசுவதையும் விரும்ப மாட்டார்!

எந்த வேலையையும் குறிப்பிட்ட நேரத்தில் செய்து முடித்துவிட வேண்டும் என்பதில் அக்கறை காட்டுவார். ஒன்பது மணிக்கு ஓர் இடத்துக்குப் புறப்பட வேண்டும் என்றால்



"இந்த சமுதாயத்தை ஓங்கியடிக்கணும்கிறேன்..."

அந்த நேரத்தில் அவர், மற்ற வேலைகளை ஒதுக்கிவிட்டுத் தயாராக இருப்பார்.

சமீபத்தில் மகாபலிபுரத்தில் ஊழியர் பயிற்சி முகாம் ஒன்று ஏற்பாடு செய்து சில தினங்கள் நடந்தது. அதில் கலந்து கொள்ள ஒரு நாள் காலை ஒன்பது மணிக்குப் புறப்படுவதாக நிகழ்ச்சி அமைக்கப்பட்டிருந்தது. காமராஜ் அவர்கள் இல்லத்திலிருந்து எங்களுடன் சேர்ந்து மகாபலிபுரம் புறப்படவிருந்த மற்றொரு பிரமுகர் வந்ததும் வராததுமாய் காப்பி வேண்டும் என்றார். நான் அனுப்பிய பையன் காப்பியுடன் திரும்புவதற்குமுன் காமராஜ் அவர்கள் மாடியிலிருந்து கீழே வந்து விட்டார். ''கிளம்புங்க, கிளம்புங்க!'' என்று துரிதப்படுத்திக் கொண்டே வந்தார். நான் கொஞ்சம் திணறிப் போனேன். ஆனாலும் சமாளித்துக் கொண்டு பக்கத்திலிருக்கும் பிரமுகரைச் சுட்டிக்காட்டி, ''ஐயா இன்னும் காப்பி குடிக்கலே. ஆள் போயிருக்கான்....! வந்தவுடனே...'' நான் பேசி முடிக்கவில்லை. காமராஜ் அவர்களின் முகபாவம் என்னை முடிக்கவிடவில்லை. அதற்குள் அந்தப் பிரமுகர் நிதானமாக, ''எனக்குக் காப்பி வேண்டாம்! மணிவர்மாதான் ஆளை அனுப்பி வைச்சிருக்கார்'' என்று கூறிவிட்டார். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. அந்த நேரத்தில் நான் என்ன பேச முடியும்...? காமராஜ் வாசலில் நின்ற காரை நோக்கி நடந்தார். நாங்கள் இருவரும் பின்தொடர்ந்தோம். மௌனம் வெகு கனமாக நிலவியது. என் மனத்துக்குள் குமுறல். மகாபலிபுரம் போகும் வழியில் நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டலில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் திருமண நிகழ்ச்சியில் தலையை நீட்டிவிட்டுப் போவதாக ஏற்பாடு. அங்கே திருமண மண்டபத்தில் நுழைந்து அமர்ந்ததும், காமராஜ் அவர்கள் திருமண சம்பந்தப்பட்ட முக்கியமான நபர் ஒருவரை அழைத்தார். அவரிடம் எங்கள் கூட வந்த பிரமுகரைச் சுட்டிக் காண்பித்து, ''இவர் காலையிலிருந்து இன்னும் காப்பி சாப்பிடலே! முதலில் அவருக்கு ஒரு காப்பி கொண்டு வரச் சொல்லுங்க!'' என்றாரே, பார்க்கலாம். என் உள்ளக் குமுறல் மாயமாக மறைந்தது!

தமிழகத்திலுள்ள அத்தனை காங்கிரஸ் கட்சி ஊழியர்களையும், பெரிய நபர்களானாலும் சரி, சிறியவர்களானாலும் சரி, அவருக்குத் தனித் தனியாக நன்கு தெரியும். அவர்களைப் பற்றிய அபார ஞாபகம் உண்டு. வெளியூரிலிருந்து வரும் ஊழியர்களிடம் அவர் மற்றவர்களைப் பற்றி விசாரிப்பதைக் கண்டு நான் அவருடைய அக்கறை பற்றியும், நினைவு கூர்மை பற்றியும் நினைத்து நினைத்து வியப்பு அடைவேன். இதைவிட ஆச்சரியமான விஷயம் என்னவென்றால், மாற்றுக் கட்சிகளின் வெளியூர் ஊழியர்கள், தொண்டர்கள், அனுதாபிகள் பற்றியும் அவருக்குப் பிரமாதமான ஞாபக சக்தி உண்டு. அவர்கள் பற்றியும் அக்கறையுடன் விசாரிப்பார்!

நம்மைப் போன்ற சாதாரண நபர்களிடையே 'பந்தபாசம்' என்ற சொல் நிறைய அடிபடும். ஆனால் காமராஜ் அவர்களைப் பொறுத்தவரையில் பந்தம் என்ற பதத்துக்கே இவர் இடம் கொடுப்பதில்லை. ஆனால் அவருக்குப் பாசம் நிறைய உண்டு. அத்தனை பாசமும் சமுதாயத்தின் மீதுதான்! மக்கள் மீதுதான்.

அப்படிப்பட்டவரே, ஒரு நாள் ஏதோ பேச்சுவாக்கில் இன்றைய மக்கள் போக்கை நினைத்து, ''இந்தச் சமுதாயத்தை ஓங்கி அடிக்கணும்கிறேன்'' என்றாரே பார்க்கலாம்! மற்றவர்கள் பேசினால் இதைப் புரட்சி மனப்பான்மை என்று சொல்லிவிடலாம்! இங்கே அனுபவம் அல்லவா சீறியது! எவ்வளவு தூரம் மனம் வெதும்பிப் பேசியிருப்பார் என்று நினைத்து நினைத்துப் பார்க்கிறேன்!

பிரபல வழக்கறிஞர் வி. கே. திருவேங்கடாச்சாரி அட்வகேட் ஜெனரலாக இருந்த நேரம். காமராஜ் அவர்கள் அப்போது விசாரணையிலிருந்த ஒரு வழக்கு விவரம் கேட்டு வந்து சொல்ல என்னை வி. கே. டி. யிடம் அனுப்பி வைத்தார்.

வி. கே. டி. விளக்கம் கொடுக்கையில் சட்ட நுணுக்கம் சம்பந்தமாக ஓர் இடம் வந்தது. நான் அதைப் புரிந்து கொண்டு பிறகு தலைவரிடம் போய்த் தெளிவுபடுத்த வேண்டும். ஆகவே அந்த இடத்தில் மீண்டும் அந்த நுணுக்கத்தை விவரிக்கும்படி வி.கே.டி. யிடம் வேண்டிக் கொண்டேன். அவர் சிரித்தார். நான் எதற்காகக் கேட்டேன் என்பதையும் புரிந்து கொண்டார். ''மிஸ்டர் மணிவர்மா! இவ்வளவு போதும்! உங்களைவிட வேகமாகவே காமராஜ் இந்த விஷயத்தைப் புரிந்து கொள்வார்!'' என்றார்.

விஷய ஞானத்தைக் கிரகிக்கும் சக்திக்கு இதைவிடச் சான்று வேறு வேண்டுமா என்ன? அட்வகேட் ஜெனரலே, சட்ட நுணுக்கம் புரிந்துகொள்ளும் இயல்புக்கான சான்றிதழை அவருக்கு வழங்கிவிட்டாரே!

கட்டுப்பாட்டுக்கும் லட்சியத்துக்கும் எப்போதுமே முதல் இடம் கொடுப்பவர் தலைவர் காமராஜ். அடிமட்டத்தில் தொண்டர்கள் ஏதாவது சிறு குற்றங்கள் செய்தால் மன்னித்துவிடுவார். மேல் மட்டங்களில் உள்ள பெரியவர்கள், வெகு சிறிய குற்றங்கள் செய்தாலும் அவைகளைப் பெரிதாக எடுத்துக் கொண்டு மனம் குமுறுவார்.

இதே போல் தனிப்பட்ட குறைபாடுகளைக் கூட (personal weakness) மன்னித்து விடுவார். ஆனால் அதே நபரிடம் அரசியல் அயோக்கியத்தனம் (political dishonesty) தென்பட்டால், அந்த நபரை அடியோடு ஒதுக்கிவிடும் மனோதிடம் இவரிடம் உண்டு. சமீபத்தில் ஒரு பிரமுகர் இப்படித்தான் மாட்டிக் கொண்டார்! அரசியல் கோட்பாடுகளில் நேர்மையானவர் என்று புரிந்து கொண்டதும் அவருடைய சொந்த பலவீனங்களை மறந்து மன்னித்தும் விட்டார்!

நான் என் தலைவரைச் சில நேரங்களில் சாதாரணக் குழந்தை உள்ளம் படைத்தவராகக் காண்கிறேன் — அவர் பிறர் கஷ்டம் கண்டு மனத்துக்குள் வெதும்பும்போது. பல நேரங்களில் தெய்வமாகவும் பார்க்கிறேன்— விருப்பு வெறுப்பின்றி நேர்மையை நிலை நாட்டும்போது!

கேட்டு எழுதியது: **கோமதி சுவாமிநாதன்**

# பொதுவான பார்வையும் நிறைவான நோக்கும்!

கச்சேரி என்றால் இதுவல்லவோ கச்சேரி என்று சொல்லி மகிழ்ந்தோம் தமிழிசையில் டி. எம். தியாகராஜன் பாடியபோது. அடேயப்பா எவ்வளவாய்க் களை கட்டிவிட்டது அன்றைக்கு! கணக்குக் கேட்பவருக்குக் கணக்கு, சுகம் வேண்டுவோருக்கு சுகம்! பிருக்காவா, வாங்கிக்கொள்; கார்வையா, கேட்டுக்கொள்! உணர்ச்சி பாவமா, இதோ! ராக பாவமா, ரெடி! — இப்படியாக ஜமாய்த்து விட்டார்.

அன்று கல்யாணி ராகம் தானம் பல்லவியில் ஆறு இடங்களில் கரகோஷம். அதைத் தொடர்ந்து ராமபத்திரனின் தனியையும் சேர்த்துக் கொள்வதானால் ஏழு! 'உன் தரிசனம் கிடைக்குமோ நடராஜன்' என்ற வரியில் 'கிடைக்குமோ' என்ற வார்த்தையில்தான் எத்தனை வித பாவங்கள்! செங்க

டி. கே. பட்டம்மாள்



சுகுணா



லதும், ஏங்குவதும், வருந்துவதும் எப்படியெல்லாம் வெளிப்பட்டன!

இவை எல்லாவற்றையும் விட மிக அதிகமாக நம் கவனத்தைக் கவர்ந்தது அவர் கச்சேரிக்குக் கீர்த்தனைகளைத் தேர்ந்தெடுத்திருக்க அழகுதான். தமிழிசைக் கச்சேரி என்றால் முதல் நாள் இரண்டு தமிழ்க் கீர்த்தனைகளைப் புதிதாகப் பாடம் பண்ணிக் கொண்டு அப்புறம் சந்தேகத்துக்குத் தாளிலும் எழுதிக் கொண்டு வருகிற காரியம் தியாகராஜனிடம் கிடையாது. பழைய உருப்படிகள் புதிய பாடல்கள் எல்லாம் கடல்மடை திறந்த வெள்ளம் போல் பிரவகித்தன. அத்தனையும் மணி மணியான கீர்த்தனைகள். 'அழகு தெய்வம், அருள் தெய்வம்; குழந்தைத் தெய்வம், குமரன் தெய்வம்; காதல் வள்ளி கண்ட தெய்வம், எந்தன் கண்மணியான தெய்வம்' என்ற கருத்தமைந்த பாடலை இயற்றியவர் திக்கு நோக்கிக் கும்பிடத் தோன்றியது. போகப் போகத் தியாகராஜனுக்கு இடம் காலம் எல்லாம் மறந்து போய்விட்டன! தெய்வ சந்நிதியில் பக்தன் அருள் கோரி அலறியதையும் உளறியதையும் மெய்சிலிர்த்துக் கைகூப்பி நின்றதையும் ராகமாலிகையில் அமைத்து அவர் நம் மனமுருக உணர்த்திக் கொண்டிருந்த சமயம், காம்போதியை ஜெயராமன் தமக்குப் பிறகு வாசிக்கா

தது கண்டு திரும்பினார். நேரமாகி விட்டதை லால்குடி காட்டிக் காட்ட வேண்டியிருந்தது. அடுத்த கச்சேரிக் குழு காத்திருந்ததே!



ஷோபனா

இந்த சீஸனில் தடுக்கி விழுந்தால் 'லால்குடி' தான் தாங்கிக்கொள்வார் என்கிற அளவில் சென்ற விடமெல்லாம் காட்சி தந்து கொண்டிருந்தார். ஆற்றலுடன் அடக்கமும் சேரும்போது அவரைத் தேடுபவரும் நாடுபவரும் அதிகரிப்பதில் வியப்பென்ன? தியாகராஜனுக்கு வாசித்தபோது விக்கிரமாதித்தன் காலத்துக்கே போய்க் கற்றுக்கொண்டு வந்தவர் போலக் கூடு விட்டுக் கூடு பாயும் வித்தையை மீண்டும் வெகு லாகவமாக நிகழ்த்திக் காட்டினார். நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது அப்படியே டி. எம். டி. பாணி. ராமபத்திரன் பாடகரை ஓரிடத்தில் கூட மிஞ்சாமல் ஆனால் அதே சமயம் தாமிருப்பதைச் சதா உணர்த்திக் கொண்டு சுகமாக வாசித்து முழுத் திருப்தி அளித்தார்.

இந்த சீசனில் பொதுவாக ஏற்பட்ட சில அனுபவங்களைக் கூறலாம். அண்ணாமலை மன்றத்துக்கு அநேகமாக ஒவ்வொரு நாளும் அமைச்சர் ராஜாராம் வந்திருந்தது சபைக்



டி. எம். டி.



ராமபத்திரன்

குக் கௌரவம் அளித்தது. ஆனால் அவரை எவ்வளவு தூரம் முதல் வரிசைப் பிரமுகர்கள் கேட்க விட்டார்கள் என்பது சந்தேகம்! எப்போதடா அகப்பட்டுக்கொள்வார் அமைச்சர் என்று காத்துக் கொண்டிருப்பவர்கள் போலப் பேச ஆரம்பித்து விடுகிறார்கள். முதல் வரிசையைச் சொல்வானேன்? பின்வரிசைகள் என்ன வாழ்கின்றன? எந்தச் சபைதான் விதிவிலக்கு? கச்சேரிக்கு வந்தவுடன் பேச ஆரம்பிக்கிற வியாதி என்றுதான் நம்மை விட்டுப் போகப் போகிறதோ?

பேசுவதை விடத் தூங்குவது எவ்வளவோ மேல் எனலாம்! — பிறருக்கு உபத்திரவமாவது இல்லையல்லவா? குறட்டை ஒலி மட்டும்

எழுப்பக் கூடாது! சாய்ந்து கொள்ள வசதியான நாற்காலியில் அண்ணாந்து தூங்கிய பிரமுகரையும் தரிசித்தோம். இப்படிச் சில சங்கீத ரசிகர்கள் என்றால் நிர்வாகிகளிடமும் குறை இல்லாது போகவில்லை. இத்தனை சபாக்கள், சங்கீத நிறுவனங்கள் வருஷக் கணக்காக நடக்கின்றனவே, இன்னமும் மைக் சரியாக வைக்க நாம் கற்கவில்லை. பல கச்சேரிகள் மைக் ஒத்துழைப்பு இல்லாததாலேயே களை இழந்தன. அரங்கத்தை அலங்கரிப்பவர் கவனத்தில் கொள்ள வேண்டியவையும் உண்டு. முக்கியமாக சாகித்தியங்களைத் தேர்ந்தெடுப்பது, நிகழ்ச்சி நிரலை அமைப்பது ஆகியவற்றைச் சொல்லலாம். ஒரு பாடகர் 'இது காற்றடைத்த தோல் பை என்பதை மறக்காதே! எமன் காத்துக் கொண்டிருக்கிறான் ஜாக்கிரதை' என்பது போன்ற கருத்தமைந்த பாடலைப் பாடி இந்த இடத்தில் நிரவலும் செய்தார். பக்தி பாவம் வேண்டியதுதான். ஆனால் பயமுறுத்தல் பாவம் அவசியமா என்று கேட்கத் தோன்றுகிறது. சாகித்ய கர்த்தாவைக் குறை கூறவில்லை. அவர் எந்தச் சந்தர்ப்பச் சூழலில், மனநிலையில் அப்படிப் பாடலை இயற்றினாரோ; அதை அரங்குக்குக் கொண்டு வரவேண்டுமா என்பதுதான் கேள்வி. ப்ரதான ராக ஆலாபனையின்போது இன்னும் சற்றுப் பாடமாட்டாரா என்று ரசிகர் ஏங்கும் அளவில் நிறுத்திக்கொள்ளச் சிலருக்குத் தெரியவில்லை. ஒரு ராகம் தானம் பல்லவி ஐம்பது நிமிஷங்கள் நீடித்து ரிகார்ட் ஏற்படுத்தியிருக்கிறது இந்த சீஸனில்! குறையை நிறையாக்கிக் கொண்ட ஒரு பெருந்தன்மையாளரையும் கண்டோம். மிருதங்கத்தில் தாளம் தப்பியபோது இன்னும் ஒரு தடவை வாசியுங்கள் என்று கேட்டுக் கொண்டு கூடவே வாசித்துத் திருப்தியுற்ற கண்ணியத்தைப் போற்றாமல் எப்படி இருப்பது? 'எத்தனை பேருக்குத் தெரியும் தவறு நேர்ந்தது என்று? தெரிந்தாலும் தம்மைக் கேட்டுவிடக் கூடியவர் யார்' என்றெல்லாம் யோசிக்கவில்லை அந்தக் கனவான்.

இந்த ஸீஸனில் செம்மங்குடி இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியில் பட்டம் பெற்றதால் அங்கு பாட ஒப்புக்கொண்டாலும் ஒப்புக்கொண்டார். தொடர்ந்து மூன்று இடங்களிலும் மறுதளிக்க முடியாத நிலை ஏற்பட்டு விட்டது. நமக்கு யோகம் அடித்தது. நாலு சபைகளிலும் அவர் பாடியதைப் பற்றி இப்படித்தான் எழுதலாம்:



திரு டி. ஏ. பாய். அனந்தகிருஷ்ண சர்மா அவர்களுக்கு சங்கீத கலாநிதி பட்டம் வழங்கிக் கௌரவிக்கிறார்.

புரிகிறதா? எவ்வளவுதான் வார்த்தைகளைத் தேடி எடுத்துப் போட்டுப் பக்கம் பக்கமாக எழுதினாலும் அது அவர் பாட்டுக்கு நியாயம் செய்ததாகாது! பூர்வ ஜன்ம புண்ணியம் நமக்குக் கேட்கக் கொடுத்து வைத்திருக்கிறது. அவ்வளவுதான். ரசிகர்களிடம் மெய்சிலிர்ப்பை ஏற்படுத்தக் கூடிய சொற்பப் பேர்களில் ஒருவர். எந்தக் கணம் சிறிது கவனக் குறைவாக இருந்துவிட்டால் அருமையான ஓர் அம்சத்தை மனத்தில் வாங்கிக் கொள்ளாமல் இருந்து விடுவோமோ என்று ரசிகர்கள் எச்சரிக்கையுடன் இருந்து கேட்கும்படி செய்பவர். சங்கீத கலா சிகாமணி பட்டத்தை வழங்கிய இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியில் கச்சேரி நிறைவெய்தும் தருணத்தில் ''ராம ஜோகி'' என்று ரசிகர் ஒருவர் எழுந்து நின்று கோரிக்கை



செம்மங்குடி சங்கரன்

எழுப்பினர். ''சரிதான்! அடுத்தாற்போல் இதே மேடையில் வேறு ஒரு கச்சேரி நடக்கணும், மறக்காதீர்கள்!'' என்ற செம்மங்குடி, ஏதோ காரியமாக எதிரே நடந்து வந்த காரியதரிசி ராமச்சந்திரனைப் பார்த்து 'என் ஸார், எப்ப முடிக்கணும்?' என்று கேட்டார். 'உங்க இஷ்டம்' என்றார் ராமச்சந்திரன். செம்மங்குடி விடவில்லை. 'அடுத்த கச்சேரி எப்போ?' என்றார். ராமச்சந்திரன் சளைக்கவில்லை. ''நீங்க முடிச்ச பிறகு'' என்று ஒரு போடு போட்டார்!

செம்மங்குடிக்கு அகாடமியிலும் தமிழிசையிலும் சங்கரன் வாசித்தார். கனடாவிலிருந்து வந்திருக்கிறார் என்று ரசிகர்களுக்கு நினைவூட்டினார் செம்மங்குடி. கனடாவிலிருந்து வந்தது இருக்கட்டும், மறுபடியும் கனடா அமெரிக்கா என்று அவர் கிளம்புவதானால் அவர் வீட்டெதிரே கொடி பிடித்துக் கொண்டு நாம் சத்தியாக்கிரகம் பண்ணவே தயார்! இந்த வாசிப்பை எத்தனை நாட்கள் கேட்காமல் இருக்க முடியும்? ஒரு சமயம் தொலை தூரத்தில் உறுமும் இடி முழக்கம் போலும் இன்னொரு சமயம் மிக அருகில் சலசலக்கும் சிற்றோடை போலவும் எப்படியெல்லாம் நாத ஜாலங்கள் செய்கிறார் மிருதங்கத்தில்!

நாலு கச்சேரிகளிலும் செம்மங்குடிக்கு ஜெயராமன்தான் பக்கபலம். லாயிட்டின் விக்ஸரை விடவும் வானவில்லின் வண்ணங்களை விடவும் அதிகாலையில் மனைவி தரும் மணமான காப்பியை விடவும் உயர்ந்த ஒன்று உண்டா என்றால் ''ஓ! ஜெயராமனின் வயலின் வாசிப்பு இருக்கிறதே!'' என்று தயங்காமல் பலர் கூறுவார்கள்.

அகாடமியின் மத்தியானக் கச்சேரிக்கு அத்தனை கூட்டம் வந்து சபை நிரம்பி இருந்ததே, (பால்கனி நீங்கலாய்) ஷோபனா ரங்காச்சாரியிடம் ரசிகர்களுக்குப் பெருகி வரும் அக்கறையை உணர்த்தியது. என் அருகில் அமர்ந்திருந்த நண்பர் ஒருவர் எடுத்த எடுப்பிலேயே, ''எம். டி. ராமநாதனின் சிஷ்யையா?'' என்று கேட்டார். 'நீங்கள் சொல்வது தவறானாலும் தவறில்லை' என்றேன். டைகரின் மற்றொரு சிஷ்யரின் சிஷ்யையான ஷோபனாவுக்குக் குரல் வசதி அருமையாக இருக்கிறது. ஞானம் அதைவிட அதிகமாய் இருக்கிறது என்பதற்குப் பெரிய பெரிய வித்வான்களே நற்சான்றளித்து விட்டார்கள். மத்தியமாவதியை மனம் கவரும் விதமாக அன்று பாடினார். உடலை அசைத்துப் பாட வேண்டியது தான்; அப்போதுதான் பாட வரும். சந்தேகமே இல்லை. ஆனால் ரொம்ப அதிகமாகி விட்டால் தன்னம்பிக்கையை 'ஓவர் கான்ஃபிடன்ஸ்' என்று சிலர் தவறாக நினைத்து விடக்கூடும். அப்படி யாரும் எண்ணி விடக்கூடாது என்பதற்காகவே இதை எழுத வேண்டியிருக்கிறது. உடல் அசைவைப் பற்றி என்ன? குரல் அசைவில் அல்லவா இருக்கிறது விஷயம்! வேணுமானால் கண்ணை மூடிக்கொண்டு கேட்டுப் பாருங்கள்! பாட்டு ஏ ஒன் என்பதை அப்போது யார் மறுக்க முடியும்?

சோபிக்க வேண்டிய ஷோபனாதான்; நிச்சயம் சோபிக்கவே போகிறார்.

இந்த ஸீஸனில் எத்தனையோ இரண்டாம் வரிசைப் பாடகர்கள் தங்கள் ஆற்றலைக் காண்பித்திருக்கிறார்கள். நேரமிருந்து கேட்க முடிந்தது சிலரைத்தான். இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியில் சீதாலட்சுமி வேங்கடேசனின் கச்சேரி இனிமைக்கு எடுத்துக்காட்டாக இருந்தது. கல்யாணி, கரகரப்பிரியா ரொம்ப தரம். திருவள்ளூர் சுப்பிரமணியத்தின் அனுபவபூர்வமான வாசிப்பு ரொம்ப உதவுபடி.

ஷோபனா பாடியதும் எப்படி டைகர் நினைவு சிலருக்கு ஏற்பட்டதோ, அப்படியே சுகுணா கிருஷ்ணகான சபையில் பாடியபோது முசிரியைக் கணத்துக்குக் கணம் நினைவுபடுத்தினார். திருவடி சரணம் முசிரி அவர்களுக்கே சமர்ப்பிக்கப்பட்ட மாதிரி அத்தனை எடுப்பாக இருந்தது. கூடுதலான சுருதியோடு வயிற்றை எக்கிப் பாடுவது உணர்ச்சி பூர்வமாகப் பாடுவது போன்ற அம்சங்களில் முசிரி முத்திரை அழுத்தமாகவே விழுந்திருக்கிறது. அதற்கெல்லாம் இசைவான சாரீர வசதியும் இருக்கிறது. இன்னும் என்ன வேணும்?

காவேரி நதி ஹொகனக்கல்லில் பாறைகளில் முட்டி மோதி நுரை தள்ளிக்கொண்டு ஆவி பறப்பது போல் நீர்த் திவலைகளைச் சிதறச் செய்கிறது. வண்ண ஜாலம் புரிகிறது. அதே காவேரி கிருஷ்ணராஜ சாகரமாக ஆடாமல் அசையாமல் வீச்சும் ஆழமும் காட்டி நிற்கிறது. அணையைத் திறந்து விட்டாலோ ஆவேசத்துடன் சீறிப் பொங்குகிறது. டி.கே. பட்டம்மாள் அவர்களின் பாட்டு ஸ்ரீரங்கத்தை யொட்டி சோலை சூழ்ந்த இரு கரைகளையும் தொட்டுக் கொண்டு கம்பீரமான அமைதியுடன் பாயும் ஆடி மாதத்துக் காவேரியை யொத்தது.

தமிழிசையில் இவரது கச்சேரியை ஒரு குடும்பக் கச்சேரி என்றே வர்ணிக்கலாம்! பின்பாட்டுக்கு மாட்டுப்பெண், மிருதங்கத்துக்கு மைந்தன், தம்பூரா போட்டது தம்பி மனைவி, எதிரே ரசிகப் பெருமக்களில் நடுநாயகமாகக் கணவர் திரு ஈசுவரன்! பேரக் குழந்தைகள் இரண்டும் பாடகியைப் பின்னிருந்தபடி அவ்வப்போது தளிர்க் கரங்களால் தொட்டு டானிக் கொடுத்துக் கொண்டிருந்தன.

அன்றைய கச்சேரியில் ஜோன்புரியில் அமைந்த 'எப்போ வருவாரோ' போன்ற அந்நாளிலேயே பிரசித்தி பெற்ற பாடல்களுடன் புதிதாகக் கவனம் செய்த பாடல்களும் மாறி மாறி இடம் பெற்று மகிழ்வித்தன. 'வள்ளிக் கணவன் பேரை' எத்தனை தரம் கேட்டால்தான் என்ன? உள்ளம் குழையத்தான் செய்கிறது. பிரதான ராகத்தை எடுப்பதற்கு முன்பாக ஏழெட்டுக் கீர்த்தனைகளுக்கான ராக ஆலாபனைகள் சாதாரணமாக வேறு கச்சேரிகளில் கேட்க முடியாத அம்சம்.

'தொன்று நிகழ்ந்த' என்று தொடங்கும் பாரதியின் எங்கள் தாய் பாடலில் 'முப்பது கோடி முகமுடையாளெனில் உயிர் மொய்ம்புற வொன்றுடையாள்' என்ற கட்டம் ஒருமைப்பாட்டுக்கு மட்டுமின்றிக் குடும்பக் கட்டுப்பாட்டுப் பிரசாரத்துக்கும் பயன்படுகிறபடியாக டி. கே. பி. அவர்களுக்கு அமைந்தது! முதல் தரம் 'முப்பது கோடி' என்று பாடியவர் இரண்டாவது தடவை 'நாற்பது கோடி' என்றும் மூன்றாவது முறையாக 'அறுபது கோடி' என்றும் பாடி இன்றைய ஒரு மாபெரும் பிரச்னையை நினைவூட்டிக் கரகோஷம் பெற்றார்.

— குட்டிகிருஷ்ணன்

# Our Birds, Animals, Trees

**The Weekly presents its 1975 Annual—even more colourful, more informative, more worth-treasuring than its predecessors.**

From the majestic tiger to the fragile mouse-deer; from the spreading banyan to the delicate honeysuckle—India has some of the richest flora and fauna in the world.

Much of it has been wantonly destroyed: 42 mammals, 14 birds and five reptiles are now in the Red Book—facing extinction.

But much of our lush natural bounty still remains. We have 500 distinct mammal species, 2,000 varieties of spectacular and melodious birds, and a dazzling array of trees and grasses.

To highlight this variety and stress the importance of preserving our irreplaceable heritage, six eminent experts write on our six natural regions:

- **Hari Dang**, the well known mountaineer and naturalist, presents **"The Mountains And The Creatures That Live On Them"**
- **Ranjit Sinh**, Deputy Secretary in the Central Ministry of Agriculture and actively associated with numerous wildlife Conservation Projects, portrays **"The Children Of The Ganga"**
- **V. S. Thirumalai**, a prolific writer on a variety of subjects, describes **"The Great Rhino Country"**
- **Dr Ishwar Prakash**, animal ecologist in the Central Arid Zone Research Institute, Jodhpur, and authority on the mammals of the Indian desert, explains **"The Amazing Life In The Indian Desert"**
- **Zafar Futehally**, free-lance journalist and founder of the Bird Watchers' Field Club of India, writes on **"The Wild Beauty Of The Deccan"**
- **M. Krishnan**, internationally known naturalist and wild-life photographer, reveals **"The Grand Spectacle Of The South"**

Plus, **Romulus Whitaker**, who has earned the nickname "Snakeman of India" and is the Honorary Director of the Madras Snake Park Trust and Conservation Centre, explores his pet theme—the variety of Indian snakes and the misconceptions about them.

The visual splendour of these regions is captured by our best wild life photographers:

**E. Hanumantha Rao, O.C. Edwards, T.S. Satyan, M. Krishnan, T. N. A. Perumal, Suleman Patel and Pat Louis.** With colour and black & white illustrations by **M.S. Talwalkar.**

Also colour, double-spread maps of every region detailing the flora, fauna and sanctuaries.

***Keep A Chunk of Nature on Your Bookshelf***

**Book Your Copy Today**

**Price Rs. 20/-**

**Postage:** (Inland) Rs. 5-
(Foreign) Rs. 6-




**The Illustrated Weekly of India**

**ANNUAL '75**





புது வருஷப் பரிசு கல்கத்தா கிரிக்கெட் வெற்றி.

★

1. லாயிட், காளிசரண், ஜூலியன் விக்கெட்களை எடுத்து வெற்றிக்கு வித்திட்ட பௌலர் சந்திரசேகர்.

★

2. டெஸ்ட் வெற்றிக்குப் பிறகு காப்டன் பட்டோடியும், உதவி காப்டன் இஞ்ஜினியரும் மக்களின் வெற்றிக் கோஷத்தை ஏற்றவாறு ஸ்டேடியத்தை வலம் வருகின்றனர்.

# மகத்தான வெற்றி















★

3. விசுவநாத்தின் 139 விலை மதிக்க வொண்ணு ரன்கள் வெற்றி தேடித் தந்தன.

★

4. மேற்கிந்தியக் கோஷ்டி ரிச்சர்ட் 'ரன் அவுட்' ஆனுர்.

5. இரண்டாம் இன்னிங்க்ஸில் பேடியின் பௌலிங்கில் 4 விக்கெட்டுகள் வீழ்ந்தன.

★

6. ராஷ்டிரபதி விசுவநாத்தைப் பாராட்டுகிறார்!

★

7. அடிபட்டுவிட்ட காப்டன் பட்டோடியை எதிர்க் கோஷ்டி ஆட்டக்காரர் கிப்ஸ் வழிநடத்திச் செல்கிறார்!

★

8. காளிசரனை 'காச்' பிடித்து 'அவுட்'டாக்கிய பெருமை விசுவநாத்துக்குக் கிடைத்தது!



சுஜாதா

வெறிச்சென்று இருந்த ஸ்டேஷனில் ரயில் தாமதித்து வந்தது. அதைப் பற்றி வெட்கப்படாமல் அதிக நேரம் அங்கே நின்றது. ஏறக்குறைய காலியாக இருந்தது. முதல் வகுப்புப் பெட்டியிலிருந்து இறங்கியவர் சுற்றுமுற்றும் போர்ட்டரைத் தேடினார். தம் மனைவியையும் மற்ற சாமான்களையும் பத்திரமாக இறக்கிப் பிளாட்பாரத்தில் சேகரித்தார். அவருக்கு நாற்பத்து ஐந்து வயது இருக்கலாம். அந்த வயதுக்கு அவர் அணிந்திருந்த 'ஷர்ட்' அமெரிக்கா போயிருந்ததைக் காட்டியது. மனைவிக்கும் அவருக்கும் வயதில் வித்தியாசம் அதிகம் இருக்கும் என உடனே தோன்றியது. அவள் கண்களை மறைத்த பெரிதான வெயில் கண்ணாடியை எடுத்ததும் அழகாக இருப்பாள் எனவும் தோன்றியது. மார்பின் குறுக்கே வெளிநாட்டு டிரான்ஸிஸ்டர் அணிந்திருந்தாள். அது ரயில் பிரயாணத்திலிருந்து விடுபட்ட புதிய ஆர்வத்தில் உரக்கப் பேசியது.

''எல்லா இலாக்காக்களையும் கவர்ந்து கொண்ட புரட்சி அரசா....''

அவள் முள்ளைத் திருப்பிச் சினிமாப் பாட்டைத் தேடினாள். அங்குலத்துக்கு அங்குலம் அதே பேச்சு ஒலிக்க அவள் அலுத்துக் கொண்டு அதை மூடினாள். தன் கைப்பையிலிருந்து சில சாதனங்களை எடுத்துத் தன்னை ஆறு செகண்டுக்குள் அழகுபடுத்திக் கொண்டாள்.

ஒரு போர்ட்டர் தன்னிச்சையாக அவர்கள் அருகே வந்து சாமான்களை நோட்டம் விட்டான்.

''இன்னொரு ஆள் வேணும்ப்பா'' என்றார்.

''இன்னொரு ஆள் இல்லீங்க. நானே இரண்டு டிரிப்பாக் கொண்டு போய்டறேன். எங்கே?''

''டாக்ஸி வேணும்ப்பா. புதுப்பாளையம் போகணும்.''

''இன்னிக்கு டாக்ஸி கிடைக்காது. சிரமங்க. எல்லோரும் கலெக்டர் ஆபீஸ் போயிருக்காங்க.''

''என்னதான் கிடைக்கும்?''

''குதிரை வண்டி.''

''சரி, தூக்கு.''

அவன் சாமான்களை ஏற்றிக் கொள்ளும் போது, ''என்னைக்கூடக் கூட்டிருக்காங்க. நானும் போக வேண்டியவன்தான். எல்லாருக்கும் கொடுக்கறாங்களாம்'' என்றான்.

அவர் புரியாமல்; ''அப்படியா? பாத்துப்பா! கண்ணாடிச் சாமான். கீழே போட்டுடாதே'' என்றார். நடந்தனர்.

குதிரை வண்டிக்காரன் தூங்கிக்கொண்டிருந்தான். ''ரஹீம் பாய், சவாரி வந்திருக்கு'' என்று போர்ட்டர் அவனை எழுப்பினான். அவன் கொட்டாவி விட்டு, ''எங்கே போகணும்?'' என்றான்.

''புதுப்பாளையம் எக்ஸ்டன்ஷன்'' என்றார்.

குதிரை திரும்பிப் பார்த்துக் கோபத்துடன் ஒரு தடவை வாலைச் சொடுக்கியது. ''புதுப்பாளையம் எக்ஸ்டன்ஷனா? ரொம்பத் தொலை வாச்சுங்களே!'' என்றான்.

''என்னப்பா இங்கிருந்து நாலு மைல்.''

''ஏழு மைல் ஆயிடுங்க. இன்னிக்கு





ஊருக்குள்ளே போக முடியாது. மேம்பாலத்தின் வழியாய்ப் போய் ஷண்முக நகர் போய்ச் சுத்தி வரணும்.''

''ஏம்பா, ஊர்லே என்ன?''

'' கலகங்க. சின்னப் பசங்கள்ளாம் தெருவை அடைச்சுட்டு ஊர்வலம் போறாங்க. புதுசா என்னவோ பேசறாங்க. சர்க்கார் மாறிப் போச்சுது.''

''இவங்களுக்கு எல்லாம் வேறே வேலை இல்லே.''

''தமிள் பேப்பர்கூட நின்னு போச்சுங்க. இன்னிக்கு வரவே இல்லே.''

''நீ இப்பப் புதுப்பாளையம் வரியா' இல்லையா?''

''பத்து ரூபாய் ஆகுங்க.''

''உங்க ராஜ்யம்பா. சரி ஏத்திக்க.'''

மனைவி முதல் தடவையாகப் பேசினாள்.

''என்ன கலகமாம்?''

''தெரியவில்லை. ஏதாவது லோக்கல் சமாசாரமாக இருக்கும். ஸ்டூடண்ட்ஸ்தான் இருக்காங்களே!''

''இல்லீங்க. நேத்து ராத்திரி பாண்டு வாசிச்சாங்க. கொடி ஏத்தினாங்க. கொஞ்சம் முன்னாலே வந்துடுங்க, பின்பாரம் ஜாஸ்தியா இருக்கு.''

குதிரை பின்னங்கால்கள் வாங்கிக்கொண்டு நகர மறுத்தது. அவன் இறங்கி ஒரு குடுமி அளவு புல்லை அதன் வாயில் காட்டினான். அது சற்று நகர்ந்தது; நடந்தது. அவன் அதன் முதுகில் சாட்டையடித்து 'தேவலோகத்து தென்னை மரமே' என்று திட்டினான். ஒரே இடத்தில் அது குதித்தது. அவர் தம் மனைவியுடன் உராய்வதை ரசித்தார். அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துப் புன்னகை செய்து கொண்டார்கள்.

''என் லைஃப்லே குதிரை வண்டியிலே போனதே இல்லே'' என்றாள்.

''நான் ஓட்டிக்கூட இருக்கிறேன் சின்ன வயசிலே'' என்றார்.

குதிரையை நடக்க வைப்பதற்கு ரஹீம் பாய் உடன் நடக்க வேண்டியதாயிருந்தது. அடிக்கடி 'இந்தா' என்று சொல்லிக்கொண்டு நடந்தான்.

''லாரிச் சாமான்கள் எல்லாம் வந்து சேர்ந்திருக்குமா?'' என்று கேட்டாள்.

''நாளைக்குத்தான் வரும். நான் யோசிச்சுத்தான் நாம் போய்ச் சேர்ந்த பிறகு சாமான்கள் வரும்படி ஏற்பாடு செய்திருக்கிறேன். இப்ப வீடு காலியாகத்தான் இருக்கும்.''

கரும் பச்சையாகச் செல்லும் ஒரு வாய்க்கால் மேம் பாலத்தின் மேல் வண்டி கடந்தபோது அவர் ''த்ரில்லிங்'' என்றார். ''நீ இப்பத்தான் முதல் தடவை பார்க்கப் போறே இல்லே?''

''எதை?''

''நம்ம வீட்டை.''

''இதென்ன கேள்வி?''

''பார்த்தா அயர்ந்து போய்விடுவாய்.''

''அதற்குச் செலவழித்த பணத்தை நினைத்து ஏற்கெனவே அயர்ந்து விட்டேன்.''

''பணம் என்ன, வரும் போகும்.''

''போய்த்தான் இருக்கிறது. ஏறக்குறைய ஒரு லட்சத்தைச் செலவழிச்சுட்டீங்க. உங்க அமெரிக்கா பணம், என் பணம், இன்ஷூ



சிறப்புச் சிறுகதை



ரன்ஸ் பாலிஸிமேலே கடன் எல்லாத்தையும் போட்டிருக்கீங்க. நம்ம ரெண்டு பேருக்காக இவ்வளவு பெரிய வீட்டைக் கட்டணுமா?''

''நம்ம ரெண்டு பேருக்காக இல்லே. உன் ஒருத்திக்காக.''

''பெரிய தாஜ்மஹால்!''

''தாஜ் மஹால்லே மனுஷங்க வாழ முடியாது. இந்த வீட்டிலே இருக்கிற சௌகரியம் அந்தக் கல்லறையிலே வருமா? மூணு பெட்ரூம் அட்டாச்ட் பாத்ரூம், மொஸாய்க் தரை....''

''மூணு பெட்ரூம்! கிழமைக்குக் கிழமை மாத்தி மாத்திப் படுத்துக்கப் போறோமா?''

''விருந்தினர்கள் வந்தா?''

''அந்தக் காட்டிலேயா?''

''காடு இல்லே அது. சின்ன ஊர்தான். நல்ல சீதோஷ்ணம், நல்ல காற்று. எப்படி இருக்கு பாரு பச்சைப் பசேல்னு.''

''தூங்குமூஞ்சி ஊரு.''

அவன் டிரான்ஸிஸ்டரை மறுபடியும் முயன்று பார்த்தான்.

''எங்கே பார்த்தாலும் பேச்சா இருக்கு.''

''நிறையப் பேசறாங்க இல்லே இந்தக் காலத்திலே.''

''பாதி புரிய மாட்டேங்குது.''

குதிரை திடீரென்று 'ட்ராட்'டில் ஓட ஆரம்பித்தது. வண்டிக்காரன் தொத்திக் கொண்டான்.

''என்னப்பா ஓடுது!''

''நம்ம வீடு இந்தப் பக்கம்தாங்க இருக்கு. வீட்டுக்குப் போறோம்னு மனப்பால் குடிக்குது. ஏண்டா டேய்?''

''சரியான ஊரு, சரியான குதிரை! எனக்கென்னவோ ஆரம்பமே நல்லா இல்லேன்னு தோணுது.''

''நம்ம வீட்டைப் பார்த்தா 'கம்ப்ளீட்'டா மாறிடுவே.''

''வீடு, வீடு, வீடு! ஒரு வருஷமா உங்க வீட்டைப் பற்றியே பேசி 'போர்' அடிச்சிருக்கீங்க.''

''உனக்குத் தெரியாது. இந்த வீடு என் இள வயசோட கனவிலே ஒண்ணு!''

''எதுத்த வீட்டு ராதா மாதிரியா?''

''இல்லே. நான் சின்ன வயசிலே இருந்த ஓட்டை வீட்டை நீ பார்த்ததில்லே. எட்டுக் குடித்தனம். 'ஸ்டோர்'னு சொல்லுவாங்க. நடுவிலே துளசி மடம். ஒரே ஒரு குளியலறை. கார்ப்பரேஷன் குழாய் பள்ளத்திலே. தண்ணி ரப்பர் வாசனை அடிக்கும். குறுக்கே முப்பத்து ஆறு கொடி கட்டிப் புடவை, ரவிக்கை, பாவாடை, குழந்தைத் துணி எல்லாம் தொங்கும். குளியலறைக்குக் கியூவிலே நிக்கணும், டால்டா டின்னை வைச்சுட்டு. எனக்கு 'கான்ஸ்டிபேஷன்' வந்ததே அந்த வீட்டிலேதான். இரைச்சல். ஆர்மோனியத்திலே பாட்டுச் சத்தம். கணவன் மனைவிங்க திட்டிப்பாங்க. அப்புறம் சமாதானம் ஆயிடுவாங்க. 'ஸ்பிரிங்' கட்டில் முனகும்!''

''சே!''

''எனக்கு அப்பலேந்தே வைராக்கியம். எப்படியாவது நம்ம வாழ்க்கையிலே வசதியா வாழற மாதிரி ஒரு வீடு நமக்கே நமக்குன்னு சௌகரியமாக் கட்டிக்கிடணும்னு சின்ன வயசிலே பதிவாயிடுச்சு. அந்த வீட்டு முகப்பு எப்படி இருக்கணும், எங்கெங்கே எப்படி எப்படி ரூம் இருக்கணும், தோட்டம் எப்படி இருக்கணும். நான் பாத்து பாத்து சம்பாதிச்சதெல்லாம் இந்த வீட்டுக்காகத்தான்.''

''தோட்டம் இருக்கா என்ன?''

''தோட்டத்துக்கு இடம் இருக்கு. அதிலே மாமரம் வெச்சு ஒரு ஊஞ்சல் போட்டு...''

''பிள்ளை இல்லாத வீட்டிலே நாம ரெண்டு பேரும் ஊஞ்சல் ஆடலாம்!''

அவர் முகம் வாடியது. திடீரென்று மௌனமானார்.

''ஸாரி!'' என்றாள்.

''எனக்கு வயசு நாற்பத்து அஞ்சுதான் ஆறது.''

''ஸாரி, ஸாரி, ஸாரி! மறந்து போயிடுங்க. வாய் தவறி...''

''இன்னும் பத்து வருஷங்களாவது...''

''எனக்கு நீங்க போதும். நீங்க போதும்.''

''சார்லி சாப்ளின் பத்திச் சொல்லட்டுமா? எழுபது வயசிலே...''

''சார்லி சாப்ளின் வேண்டாம். நம்ம வீட்டைப் பத்திச் சொல்லுங்க.''

அவர் மறுபடியும் உற்சாகமானார். ''மாடியிலே 'கெஸ்ட் ரூம்' கட்டி இருக்கேன். அப்புறம் போர்ட்டிகோ மாதிரி 'ஸிட் அவுட்' மாதிரி கட்டியிருக்கேன். சாயங்கால வேளையிலே நீயும் நானும் எதிர் எதிரே உட்கார்ந்து கொண்டு புஸ்தகம் படிக்கலாம். 'ஸ்டீரியோ' கேட்கலாம்.''

''வேலைக்காரிங்க கிடைப்பாங்களா?''

''நிறைய. இந்தப் பக்கமெல்லாம் ஏழை ஜனங்க ஜாஸ்தி. ஜஸ்ட் இமாஜின். கண்டிராக்டர் சொன்னார். பத்து ரூபா கொடுத்துச் சாப்பாடு போட்டா வீட்டோடயே பொண்ணு வந்து இருந்துடுமாம். துணி தோய்க்குமாம். வீடு துடைச்சுப் பெருக்கி, பாத்திரம் தேய்ச்சு, சமையல் செய்து...எல்லாம் செய்யுமாம். எவ்வளவு 'சீப்' பாரு! யூ. எஸ்.லே ஞாபகம் இருக்கா? வாரம் ஒருத்தி வந்து துணிகளை 'ப்ரெஸ்' பண்றத்துக்குப் பத்து டாலரும் டி. வி.யும் கேட்டா. இண்டியாவைப் போல வராது.''

''ஏழைமை வாழ்க!'' என்றாள்.

''புதுப்பாளையத்திலே எங்கேங்க?'' என்றான் குதிரை வண்டிக்காரன்.

''பால் டிப்போ ஒண்ணு வரும். அங்கே திரும்பி அஞ்சாவது 'கிராஸ்'லே திரும்பணும்'' என்றார்.

''தனியா இருக்குது.''

''இப்பத்தான் டெவலப் ஆறது ஏரியா. நான் முதல்லே வந்தபோது ஏகப்பட்ட குடிசையா இருந்தது. எல்லாம் க்ளியர் பண்ணிட்டாங்க. லுக் டார்லிங்!'' அவர் சிறு குழந்தை போல் உற்சாகப்பட்டார். ''அதோ பார், கடைசியிலே முத்து மாதிரி பளபளன்னு, அதான் நம்ம வீடு.''

வீடு அழகாகத்தான் இருந்தது. எமல்ஷன் வகை பெயிண்ட் அடித்து ஒளிர்ந்தது. சற்று உயரமான மனையில் கட்டிடம். புதிய கட்டிடக் கலையின் அம்சங்கள் கொண்டு ஜொலித்தது. வரவேற்றது.

குதிரை நுரைத்தது. குதிரை வண்டிக்காரன் அதற்கு ஷொட்டுக் கொடுத்துவிட்டுச் சாமான்களை இறக்க முற்பட்டான். அவர் தம் பர்ஸைத் திறந்து நோட்டை எடுத்தார். அவர் மனைவி மெதுவாகச் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு வீட்டின் வாயிலை அணுகினாள்.

''கதவு பூட்டவில்லையே!'' என்றாள் அங்கிருந்து.

''கண்டிராக்டரிடம் சாவி இருக்கிறது.. திறந்து வைத்திருப்பான்.''

அவள் மெதுவாக அந்தச் சிங்காரத் தேக்குக் கதவைத் திறந்தாள்.

வீறிட்டாள்.

அவர் அதிர்ந்து ''என்ன?'' என்று கத்தினார்.

''இங்கே வாருங்களேன், வந்து பாருங்களேன்!''

குரலில் இருந்த அவசரம் சாமான்களை மறந்து வயதை மறந்து அவரை அவளிடம் ஓட வைத்தது.

''உள்ளே பாருங்களேன்!'' என்றாள்.

உள்ளே...

மொஸாய்க் பதித்த பெரிய ஹால். அதன் குறுக்கே கயிறுகள் கட்டி ஏழைத் துணிகள் தொங்கிக் கொண்டிருந்தன. கட்டம்போட்ட சட்டைகள், காக்கி டிராயர்கள், வேட்டிகள், பருத்திச் சேலைகள், சீட்டிப் பாவாடைகள், ஓரத்தில் இரண்டு மூன்று விறகடுப்புக்களில் அலுமினியப் பாத்திரங்கள் உற்சாகமாகக் கொதித்துக் கொண்டிருந்தன. புகை படிந்திருந்தது.

அந்த ஹாலில் சுமார் பத்துப் பேர் இருந்தார்கள். பெண்கள், ஆண்கள், கிழவர்கள், சர்க்கித் பாண்டி ஆடிக்கொண்டும் ஒருவரை ஒருவர் துரத்திக் கொண்டும் குழந்தைகள். ஆடு புலி ஆட்டம்...

இவர்கள் நுழைந்ததைச் சிலர் அலட்சியமாகப் பார்த்தார்கள்.

''வாட் த ஹெல்'' என்று இரைந்தார். அவர்கள் எல்லோரும் இப்போது அவரைப் பார்த்தார்கள்.

''யார்யா நீங்கள் எல்லாம்? யார் நீங்க? எப்படி உள்ளே வந்தீங்க? யாரைக் கேட்டு உள்ளே வந்தீங்க?''

அவர்களில் ஓர் இளைஞனை எல்லோரும் எதிர்பார்த்தார்கள். அவன் வேட்டியை டப்பாக் கட்டுக் கட்டிக் கொண்டு மெதுவாக அவர் அருகே வந்தான். அவரை நேராகப் பார்த்தான்.

''என்ன வாத்தியாரே!'' என்றான்.

''யார்யா நீ?''

''நீ யாரு?''

''என்னது! நான் இந்த வீட்டுச் சொந்தக்காரன்.''

''நீகூடவா?''

''என்னடா சொல்றே?''

''மரியாதையாப் பேசு! உனக்கும் லெட்டர் வந்திருக்கா?''

''என்ன லெட்டர்?''

''புது சர்க்கார் இந்த வீட்டை எடுத்துக்கிட்டு எங்களுக்கெல்லாம் கொடுத்திருக்காங்க... லெட்டர் கொடுத்திருக்காங்க! உனக்கும் பங்கு உண்டா? லெட்டரைக் காட்டு, பார்க்கலாம்!''

(இது நிகழக்கூடிய ஒரு கதை.)

# ஒரு 90-விநாடிக் கண்ணோட்டம்- டிவிஎஸ் அளிக்கும் முழுமையான சேவை

டிவிஎஸ் ஒரு புதிய
டிரக்கை உங்களுக்கு
விற்பனை செய்கிறது.



அதன் முதலீட்டில் 70 சதவிகிதம் அல்லது
அதற்கு மேலும் பெற வழி செய்கிறது.



அதன் பாடியைக் கட்டித்
தருகிறது.



அதற்கான பராமரிப்பு சேவையை
அளிக்கிறது.



டயர்களை ரீடிரெட் செய்கிறது.



உங்கள் நம்பிக்கைக்கு
உரியது டிவிஎஸ்




அசல் மாற்றுப் பகுதிகள் பல டிவிஎஸ்
அலுவலகங்களிலும்,
ஏராளமான விற்பனை/பணி
நிலையங்களிலும் கிடைக்கின்றன.

டி.வி. சுந்தரம் அய்யங்கார் அண்ட் சன்ஸ்
பிரைவேட் லிமிடெட், மதுரை.

SAA/TVS/1036

## 30. தீர்ப்பு




நவரசம் பத்திரிகாலயத்தில் கோமளம் மனம் வெதும்பிக் கொண்டிருந்த நேரத்தில், நீதிபதி நாகசுந்தரம், நீதிமன்றத்தில் கற்பழிப்பு வழக்கை விசாரித்துக் கொண்டிருந்தார். ஆவுடையப்ப பிள்ளை வர இயலாததால் சம்பத் மட்டுமே தனியாக வழக்கை நடத்த வேண்டியிருந்தது.

அவனுடைய ஆசைகள் வெறுங் கனவாகி விட்டன. அவன் திட்டமிட்டிருந்தபடி முந்தின நாள் அவனால் வெற்றி பெற இயலவில்லை. இனி நளினி தனக்குக் கிடைக்க மாட்டாள் என்று அவன் முடிவு செய்த பிறகு, தன்னுடைய வருங்காலத்தைப் பற்றி எண்ணினான். நல்லவேளையாகச் சிறைக்குப் போகாமல் தப்பியதை எண்ணி ஓரளவு மன நிம்மதியடைந்தான். அதற்காக நளினிக்கு மானசீகமாக நன்றி செலுத்தினான். இருந்தாலும் 'பென்ஸ்' காரும் பங்களாவும் அவன் எண்ணத்தை விட்டு அகல மறுத்துவிட்டன. இனி அவன் எதையும் சுய முயற்சியால்தான் பெற வேண்டும். நானூறு ரூபாய் வருமானத்தில் என்ன அனுபவித்துவிட முடியும்?

முந்தின நாள் நிகழ்ச்சியும், அதனால் ஏற்பட்ட மன அதிர்ச்சியும் அவனுடைய உள்ளத்திலும் உடலிலும் பலவீனத்தை ஏற்படுத்தியிருந்தன. வாழ்க்கையே அஸ்தமித்து விட்டது போன்ற உணர்வு ஆட்கொண்டிருந்தது.

காலையில் வக்கீல் குமாஸ்தா சொன்னது நினைவுக்கு வந்தது.

''சின்ன வக்கீல் இந்த வழக்கைத் தனியாக நடத்தப் போகிறார். இதில் வெற்றி கிடைத்து விட்டால் பேர் பிரபலமாகிவிடும்'' என்று குமாஸ்தா யாரிடமோ சொல்லிக்கொண்டிருந்தார். ''வெற்றி கிடைத்தால்தானே?'' என்று தனக்குள் முனகிக் கொண்டான். ஆவுடையப்ப பிள்ளைக்கே சிக்கலாகத் தோன்றிய இந்த வழக்கில் தன்னால் வெற்றி பெற முடியும் என்ற நம்பிக்கை சம்பத்துக்கு இல்லை. ஆனால் காலையில் நீதிமன்றத்துக்குள் நுழைந்து அமர்ந்தபோது அவனைப் பார்த்து அரசாங்க வக்கீலும் கருணாகரனும் அலட்சியமாகச் சிரித்ததைக் கண்டதும் அவனுள்ளே கோபம் மூண்டது. ஆவுடையப்ப பிள்ளையே திணறக் கூடிய வழக்கை இவன் எங்கே நடத்தி வெற்றி பெறப் போகிறான் என்ற பாவனையில் இருந்த அவர்கள் சிரிப்பு, அவனுள் ஒரு வெறியை ஊட்டியது. அந்த வழக்கில் எப்படியும் வெற்றி பெற்றே ஆக வேண்டும் என்னும் ஆவேசம் தோன்றியது. ஆனால் அதே சமயம் உள்ளூறப் பயமும் உண்டாயிற்று. சாட்சிகளும் சந்தேகச் சூழ்நிலையும் வழக்கில் மும்முரமாயிருக்கும்போது வெற்றி பெறுவது எப்படி?

நீதிபதி நாகசுந்தரம் வழக்கு ஆரம்பமாகிய போது சம்பத்தை உற்சாகப்படுத்தினார்.

''மிஸ்டர் சம்பத்! உங்கள் சீனியருக்கு ஏற்பட்ட விபத்துக்கு வருந்துகிறேன். அவர் ஜூனியரான நீங்கள் இந்த வழக்கைத் திறம்பட நடத்துவீர்கள் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு'' என்று நீதிபதி கூறிய போது சம்பத் சிறிது தெம்படைந்தான்.

ஆனால் சாட்சிகள் விசாரிக்கப்பட்டபோது அவன் நம்பிக்கை குலைய ஆரம்பித்துவிட்டது.

தன்னைக் கற்பழித்து விட்டான் என்று முந்தின நாள் விசாரணையில் சாட்சி சொன்ன வேலம்மாள், தன்னை வைக்கோல் படப்பு மேல் தள்ளினான் என்று சொன்னதைப் பற்றிச் சம்பத் குறுக்கு விசாரணை செய்தான்.

''நீ என்ன தொழில் செய்கிறாய்?'' என்று சம்பத் கேட்டான்.

''சும்மாத்தான் இருக்கிறேன்'' என்றாள் வேலம்மாள்.

''சாப்பாட்டுக்கு வழி?''

''மலேயாவில் இருக்கும் என் புருஷனிடமிருந்து பணம் வருகிறது.''

''அதைத் தவிர வேறு வருமானம் உனக்கு இல்லை, அப்படித்தானே?''

சாட்சி பதில் சொல்லாமல் நின்றாள்.

''என்ன அப்படித்தானே?'' — மீண்டும் கேட்டான், சம்பத்.

''அதுதான் சொல்லி விட்டாளே புருஷனிடமிருந்து பணம் வருகிறது என்று!'' இவ்வாறு குறுக்கே பேசினார், அரசாங்க வக்கீல், முனுசாமி.

''அவளே சொல்லட்டுமே. இந்தாம்மா புருஷனிடமிருந்து வரும் பணம் தவிர வேறு வழியில் உனக்குச் சம்பாத்தியம் ஏதாவது உண்டா?'' — சம்பத் கேட்டான்.

''இதை நான் ஆட்சேபிக்கிறேன். யுவர் ஆனர். இது சாட்சியை அவமானப்படுத்துவது போலாகும்'' என்று குறுக்கிட்டார் முனுசாமி.

''இதிலென்ன அவமானம்?'' — சம்பத் கேட்டான்.

''வேறு வழியில் சம்பாத்தியம் உண்டா என்ற கேள்விக்கு என்ன அர்த்தம்?'' என்று கோபத்துடன் கேட்டார் முனுசாமி.

''வேறு ஏதாவது சொந்தத்தில் வியாபாரமோ, தொழிலோ செய்து சம்பாத்தியம் உண்டா என்று கேட்கிறேன். இதில் ஆட்சேபணைக்கு என்ன இருக்கிறது?'' என்று கூறிவிட்டு வேலம்மாளைப் பார்த்து, ''சொல்லு, வேறு ஏதாவது சம்பாத்தியம் உண்டா? அதாவது வேறு வீடுகளில் சமையல் செய்வது, காய்கறித் தோட்டம் போட்டுக் காய்கறி விற்பது, மாடு வளர்த்துப் பால் விற்பது போன்ற சம்பாத்தியம் ஏதாவது உண்டா என்று கேட்கிறேன்.''

''இல்லை'' என்றாள் வேலம்மாள்.

சம்பத் திருப்தியோடு உட்கார்ந்தான். அந்தக் கேள்வியை அவன் ஏன் கேட்டான் என்பதை முனுசாமியோ கருணாகரனோ

புரிந்து கொள்ளவில்லை. ஆனால் நீதிபதி புரிந்து கொண்டு சம்பத்தைப் பார்த்துப் புன்னகை செய்தார். ஆவுடையப்ப பிள்ளையின் ஜூனியர் மக்காக இருக்க முடியாது என்ற பாவனை அந்தச் சிரிப்பில் இருந்தது.

மத்தியானம் இடைவேளையில் சம்பத் சீக்கிரமாகவே மூக்காண்டி ஐயர் கடையில் சாப்பிட்டுவிட்டு நீதிமன்றத்தில் போய் அமர்ந்து விட்டான். விசாரணை ஆரம்பமாக இன்னும் அரை மணி நேரம் இருந்ததால் நீதிமன்றத்துக்குள் வேறு யாரும் இல்லை. சம்பத் மட்டும் தனிமையில் பல நினைவுகளைப் பரவ விட்டுக் கொண்டிருந்தான். அவனுடைய நினைவில் முந்தின நாள் நடைபெற்ற சம்பவம் சுழன்று கொண்டிருந்தது.

ஒரு நல்ல சந்தர்ப்பத்தை நழுவ விட்டு விட்டோம் என்ற ஏமாற்றம்தான் அவனை மிகவும் வாட்டியது. நளினியைத் தப்ப விடாமலிருந்தால்... அவள் எனக்கேதான் சொந்தமாக வேண்டியிருந்திருக்கும். அவள் தலையையும் அசைக்க முடியாதவாறு அழுத்தியிருக்க வேண்டும். கவனக் குறைவாக இருந்ததால்தானே மூக்கில் மோதிவிட்டாள்! சேச்சே, ஒரு பெண்ணிடம் இப்படி ஒரு தோல்வியா? பெரிய விளையாட்டு வீரன் என்று கல்லூரியில் பெயர் பெற்று என்ன பயன்? ஒரு பெண்ணைப் பணிய வைக்க முடியவில்லையே! அவள் மூக்கில் மோதுவதற்கு முன்புகூட எந்த அளவுக்கு அவளைப் பணிய வைக்க முடிந்தது? என் முழு பலத்தையும் உபயோகித்தும் அவள் திமிறித் திமிறிப் புரண்டாளே. சேச்சே, இந்த விஷயத்தில் ஒரு பெண்ணின் ஒத்துழைப்பு இல்லையென்றால் வெற்றி பெறுவது சிரமம்தான் போலிருக்கிறது.....



திடீரென்று சம்பத்தின் சிந்தனையில் ஓர் அதிர்ச்சி! புரியாத, சிக்கலான ஒரு புதிருக்கு விடை கிடைத்துவிட்ட பரபரப்புத் தோன்றியது. நினைவில் குற்றவாளி குருசாமியின் ஒல்லி உடலும், வேலம்மாளின் கட்டுடலும் தோன்றின. கற்பழிப்பு வழக்கில் நிச்சயம் வெற்றி கிடைத்துவிடும் என்ற நம்பிக்கை தோன்றியது.

நல்ல உடற்கட்டும் பலமும் பொருந்திய நானே நளினியிடம் தோற்றுப் போனேனே; எலும்பும் தோலுமாகச் சோகை பிடித்தவனைப் போலிருக்கும் இந்தக் குருசாமியா பயில்வானைப் போல் கட்டுடலோடு இருக்கும் வேலம்மாளைப் பலாத்காரம் செய்ய முடியும்? ஓ.....! இந்த வழக்கில் வெற்றி நிச்சயம்!

நளினி கிடைக்கவில்லை. பரவாயில்லை. பரபரப்பான இந்த வழக்கில் வெற்றி கிடைத்து விட்டால் போதும். இதில் வெற்றி கிடைத்து விட்டால், என் பெயர் பிரபலமாகி விடும். பெயர் பிரபலமாகி விட்டால் 'பென்ஸ்' காரும், பங்களாவும் வாங்குவதா கஷ்டம்?

இடைவேளைக்குப் பிறகு மத்தியானம் வழக்கு நடைபெறத் தொடங்கியதும் டாக்டர் ராஜகோபால் சாட்சி சொல்லக் கூண்டில் ஏறினார். கருணாகரன் இன்னும் வரவில்லை. முனுசாமி தவித்தார். அடிக்கடி வாசலையே பார்த்தார். அருகில் கருணாகரன் இல்லையென்றால் முனுசாமியின் மூளை வேலை செய்யாது. அந்த வழக்கில் டாக்டரின் சாட்சியம் மிகவும் முக்கியம். இந்தச் சமயத்தில் கருணாகரன் துணைக்கு இல்லாதது முனுசாமிக்குப் பெரும் கவலையாக இருந்தது.

டாக்டர் ராஜகோபால் தம்முடைய சோதனையில் கண்ட முடிவுகளைக் கூறி முடித்ததும் அரசாங்க வக்கீல் முனுசாமி கேட்டார்: ''டாக்டர், இந்த வழக்கில் உங்கள் அபிப்பிராயம் என்ன?''

ராஜகோபால் பதில் கூறாமல் சற்றுத் தயங்கினார். முனுசாமி வெறிக்கப் பார்த்தார். பக்கத்தில் இருந்த போலீஸ் இன்ஸ்பெக்டர், டாக்டரை முறைத்துப் பார்த்தார். ராஜகோபால் விழித்துக் கொண்டு நின்றார்.

''அதாவது டாக்டர், குற்றவாளிக்கும் அந்தப் பெண்ணுக்கும் தொடர்பு இருந்திருக்கிறது என்பது உங்கள் சோதனையில் இருந்து தெரிகிறதா இல்லையா?'' — முனுசாமி கேட்டார்.

சம்பத் பரபரப்புடன் எழுந்தான். ''இந்தக் கேள்வியை நான் ஆட்சேபிக்கிறேன், யுவர் ஆனர். இது டாக்டருக்குச் சம்பந்தமில்லாத கேள்வி. சம்பவம் நடைபெற்றபோது டாக்டர் பக்கத்திலேயா இருந்தார்?'' என்று கேட்டான், சம்பத்.

முனுசாமி கோபத்துடன் திரும்பினார். ''கண்கூடாகவே பார்த்துக் கையும் களவுமாய்க் குற்றவாளியைப் பிடித்தவர்கள், இங்கே இன்று காலையில் சாட்சி சொன்னார்களே'' என்றார்.

''அந்தச் சாட்சிகள் எல்லோரும் குற்றவாளிக்குவேண்டாதவர்கள்'' என்றான்சம்பத்.

''சரி, டாக்டர், உங்களுடைய சோதனையிலிருந்து பலாத்காரம் நடைபெற்றிருக்கிறது என்று சொல்ல முடியுமா?'' என்று கேட்டார் முனுசாமி.

டாக்டர் பதில் கூறத் தயங்கினார். முனுசாமி கோபத்துடன் முறைத்தார். டாக்டர் பயந்தபடியே விழித்துக் கொண்டு நின்றார்.

''சொல்லுங்கள் டாக்டர்!'' என்றார் முனுசாமி. மீண்டும் டாக்டர் தயங்கினபடியே ''ஆமாம்'' என்றார். முனுசாமி திருப்தியோடு அமர்ந்தார்.

சம்பத் குறுக்கு விசாரணை செய்ய எழுந்தான்.

''டாக்டர்! உங்கள் சோதனையிலிருந்து, அந்தப் பெண்ணுக்கு ஓர் ஆணுடனும், இந்தக் குற்றவாளி குருசாமிக்கு ஒரு பெண்ணுடனும் தொடர்பு இருந்திருக்கிறது என்பதுதான் தெரியுமே தவிர, அந்தப் பெண்ணுக்கு இந்தக் குருசாமியுடன்தான் தொடர்பு ஏற்பட்டிருந்தது என்பது தெரியாது அல்லவா?'' என்று கேட்டான்.

டாக்டர் திகைத்தார். முகமெல்லாம் வியர்த்தது. சற்றுத் தயங்கினார். பிறகு ''தெரியாது'' என்றார்.

''ஆக இந்தக் குருசாமிதான் அந்தப் பெண்ணைக் கெடுத்திருப்பான் என்பது உங்கள் சோதனையிலிருந்து தெரியாது?''

''தெரியாது.''

இந்தச் சமயத்தில் முனுசாமி பரபரப்புடன் எழுந்தார். ''என் நண்பர் வழக்கையே மாற்றுகிறார். வழக்கில் சம்பந்தப்பட்ட இருவருக்கும்வெவ்வேறு நபர்களுடன் தொடர்பு இருந்திருக்கிறது என்று கூறுவது விசித்திரந்தான். வேலம்மாளும் குருசாமியும் இப்படி ஒரு வழக்கில் மாட்டிக் கொள்ள வேண்டுமென்று வெவ்வேறு நபருடன் தொடர்பு கொண்டுவிட்டு, பிறகு வேலம்மாளுடைய தோட்டத்தில் சந்தித்துக் கொண்டார்கள் போலிருக்கிறது!'' என்றார்.

இதைக் கேட்டதும் நீதிமன்றத்தில் சிரிப்பொலி எழுந்தது. நீதிபதியும் சிரித்தார். சம்பத், கோபத்துடன் முனுசாமியைப் பார்த்து முறைத்தான். சற்றுக் குழம்பி நின்றான். கேள்வியை வேறு விதமாகக் கேட்டிருந்திருக்க வேண்டும் என்று உணர்ந்தான். டாக்டரை நிமிர்ந்து பார்த்தான்.

''டாக்டர்! இது பலாத்காரம்தான் என்பதற்குத் தங்கள் சோதனையில் என்ன நிரூபணம் இருக்கிறது?'' என்று கேட்டான்.

''அவளுக்கு ஓர் ஆணிடம் தொடர்பு இருந்திருக்கிறது



என்பது சோதனையிலிருந்து தெரியுமே'' என்றார் டாக்டர், அலட்சியமாக.

''உங்கள் சோதனையிலிருந்து தொடர்பு இருந்திருக்கிறது என்பது தெரியும். ஆனால் அந்தத் தொடர்பு பலாத்காரத்தினால் ஏற்பட்ட. தொடர்பு என்பதற்கு ஆதாரம் இருக்கிறதா?'' என்று சம்பத் கேட்டதும் டாக்டர் திடுக்கிட்டார். அவர் பயந்து எதிர்பார்த்த கேள்வியைச் சம்பத் கேட்டு விட்டான். டாக்டரின் உடல் சற்று நடுங்கியது. நினைவில் கருணாகரனின் முகம் தோன்றியது. அந்தச் சமயத்தில் முனுசாமி எழுந்தார்.

''ஓ....! நீங்கள் கேட்பதைப் பார்த்தால் குற்றவாளியும் அந்தப் பெண்ணும் மனம் ஒப்பிக் காதல் புரிந்தார்கள் என்றுகூடச் சொல்வீர்கள் போலிருக்கிறது'' என்றார்.

''ஏன் அப்படியும் இருக்கக் கூடாது?''— சம்பத் கேட்டான்.

''ஓ....ஹோ...!'' என்று சிரித்தார் முனுசாமி. பிறகு, ''அப்படியானால் இந்த வழக்கே இங்கு நடைபெறுவது அவசியமில்லையே!'' என்று கூறி மீண்டும் சிரித்தார்.

''அதையேதான் நானும் சுட்டிக் காட்டப் போகிறேன்'' என்ற சம்பத், டாக்டரை வெறிக்கப் பார்த்தபடி, ''சொல்லுங்கள் டாக்டர்'' என்றான்.

டாக்டர் கேள்வியை மறந்து விட்டவர் போல் நடித்து, ''என்ன?'' என்றார்.

சம்பத், கேள்வியை மீண்டும் கேட்டான்: ''அந்தப் பெண்ணுக்கு ஏற்பட்ட. தொடர்பு, பலாத்காரத்தினால்தான் ஏற்பட்டது என்பதற்கு ஆதாரம் உங்கள் சோதனையில் இருக்கிறதா?''

டாக்டர் ராஜகோபால் குழம்பினார். கருணாகரனின் முகம் நினைவில் தோன்றியது. திரும்பி முனுசாமியைப் பார்த்தார். முனுசாமி வெறிக்கப் பார்த்துக் கொண்டு இருந்தார். பக்கத்திலிருந்த போலீஸ் இன்ஸ்பெக்டரின் கோபப் பார்வை டாக்டரை அச்சுறுத்திக் கொண்டிருந்தது. கைக்குட்டையால் தம் முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

''இருக்கிறது'' என்றார். வார்த்தைகள் தயக்கத்துடன் வெளிவந்தன. முனுசாமியின் முகமும் இன்ஸ்பெக்டரின் முகமும் மலர்ந்தன. சம்பத் திகைத்தான். டாக்டரை முறைத்துப் பார்த்தான்.

''டாக்டர்! பலாத்காரம்தான் என்பதை எதை ஆதாரமாகக் கொண்டு சொல்லுகிறீர்கள்?'' — சம்பத் கேட்டான்.

''மறைவிடங்களில் தோன்றியிருந்த மாறுபாடுகள், அறிகுறிகள் இவைகளை வைத்து'' என்றார் டாக்டர். வார்த்தைகள் குழறியபடி வெளிவந்தன.

சம்பத் முகத்தைச் சுளித்தான். தனக்கு எதிரான பதிலை டாக்டர் கூறிவிட்டாரே என்று உள்ளூறப் புழுங்கினான். தாற்காலிகமாகத் தனக்குக் கிடைத்த தோல்வியை விழுங்கிக் கொண்டான். இருப்பினும் துணிந்து ஒரு கேள்வியைக் கேட்டான்.

''டாக்டர்! உங்கள் சோதனை ரிப்போர்ட்டில் கண்டுள்ள அறிகுறிகள், ஓர் ஆணும், ஒரு பெண்ணும் மிருகத்தனமான வெறியுடன் முரட்

## ஆடல் பாடல்



''என்ன செகரட்டரிவாள்! பாட்டுக் கச்சேரியிலே ஏன் அபிநயம் பிடிக்கிறாங்க?''



''அவங்க டான்ஸ் நன்னா ஆடுவாங்கன்னு எல்லோருக்கும் தெரியணுமாம்!''



''அப்ப டான்ஸ் சான்ஸே கொடுக்கிறது தானே?''






''கொடுத்துப் பார்த்தாங்க! சும்மா நின்னுண்டு பாடிண்டிருந்தாங்க! நன்னாப் பாடுவாங்கன்னு எல்லோருக்கும் தெரியணுமாம்!''

டுத்தனமாகக் காதல் புரிந்திருந்தாலும் ஏற்பட்டிருக்கலாம் அல்லவா?''

இந்தக் கேள்வியை டாக்டர் எதிர்பார்க்கவில்லை. குழப்பத்துடன் நின்றார். சம்பத்தின் சாமர்த்தியத்தைப் போற்றுவதுபோல் நீதிபதி இலேசாகச் சிரித்தார். நீதிமன்றத்தில் சற்றுநேரம் அமைதி நிலவியது.

''சொல்லுங்கள், டாக்டர்'' என்றான், சம்பத்.

''ஏற்பட்டிருக்கலாம்'' என்றார் டாக்டர்.

''டாக்டர்! இதோ குற்றவாளிக் கூண்டில் நிற்கிறானே, இவன் என்ன நிறை இருப்பான்?''

டாக்டர் திரும்பிக் கைதிக் கூண்டில் நின்றிருந்த குருசாமியைப் பார்த்தார்.

''சுமார் நூறு பவுண்டு இருப்பான்.''

''இவனுக்கு வயது என்ன இருக்கும்?''

''இருபது'' என்று குறுக்கிட்டுச் சொன்னார் முனுசாமி.

''அந்தப் பெண்ணுக்கு வயது என்ன?''— சம்பத் கேட்டான்.

''இருபத்தைந்து'' என்று மீண்டும் குறுக்கிட்டுச் சொன்னார் முனுசாமி.

''அவள் என்ன நிறை இருப்பாள் டாக்டர்?''

''நூற்றி ஐம்பது பவுண்டு இருப்பாள்''— டாக்டர் கூறினார்.

அதோடு குறுக்கு விசாரணையை முடித்துக் கொண்டு அமர்ந்தான் சம்பத். அதற்குப் பிறகு, போலீஸ்காரர்களை விசாரித்து முடித்து விட்டுத் தம் வாதத்தை ஆரம்பித்தார் முனுசாமி.

தீவிரமாக வாதாடினார். கற்பழித்த குற்றத்துக்குத் தகுந்த தண்டனை கொடுக்கும்படி வேண்டினார்.

சம்பத் பேச எழுந்தபோது, முனுசாமி, அலட்சியமாகச் சிரித்தார். அதை அவன் இலட்சியம் செய்யவில்லை. அவன் பேசத் தொடங்கியதும், நீதிபதி கவனத்துடன் கேட்கத் தொடங்கினார்.

பலாத்காரம் ஏதும் நடக்கவில்லை என்று வாதாடினான். பலாத்காரத்துக்கான அறிகுறிகள் எதுவும் இல்லை. அவனுடைய உடலிலோ அல்லது அவளுடைய உடலிலோ ஒரு சிராய்ப்புக் கூட இல்லை என்பதை எடுத்துச் சொன்னான். அப்போது முனுசாமி குறுக்கிட்டு, ''வைக்கோல் போரின் மீது சாய்ந்தால் எப்படிச் சிராய்ப்பு ஏற்படும்?'' என்று இரைந்தார்.

''வைக்கோல் போர் கதை ஒரு கற்பனை. அவள் வீட்டில் மாடு ஏதும் இல்லை. எந்தத் தொழிலும் அவள் செய்யவில்லை. அப்படியிருக்க வைக்கோல் போர் அவள் வீட்டில் எப்படி இருக்க முடியும்? இதைத் தெரிந்து கொள்ளத்தான் அவள் வேறு ஏதாவது தொழில் புரிந்து சம்பாதிக்கிறாளா எனக் கேட்டேன். இரண்டாவதாக, ஒரு பயில்வானைப் போலக் கட்டுடலும், நல்ல உயரமும் நூற்றைம்பது பவுண்டு நிறையும் கொண்ட ஒரு பெண்ணை, இவனைப் போன்ற ஒரு பலவீனமான நூறு பவுண்டு நோஞ்சான் பலாத்காரம் செய்தான் என்பதே கற்பனைதான். அவளைப் பயமுறுத்திச் சம்மதிக்க வைக்க இவனிடம் ஆயுதம் எதுவும் இல்லை என்று அவளே சொல்லியிருக்கிறாள். வந்தாலும்! திடீரென்று அவளைப் பிடித்துக் கீழே தள்ளிக் கற்பழித்து விட்டாலும்! அவள், இடது கையாலேயே இவனைத் தூக்கி எறிந்து விடுவாள். அவளைப் போய் இவன் பலாத்காரம் செய்தான் என்பதை எப்படி நம்புவது, யுவர் ஆனர்? இவனை அவள் பலாத்காரம் செய்தாள் என்று சொன்னாலாவது நம்ப வழியிருக்கிறது'' என்று சம்பத் கூறியதும், நீதிமன்றத்தில் குபீரென்று சிரிப்பொலி எழுந்தது. நீதிபதியும் சிரித்தார்.

''ஆல் ரைட், நான் இப்போதே தீர்ப்பை டிக்டேட் செய்து விடுகிறேன்'' என்ற கூறிய நீதிபதி பெஞ்ச் கிளார்க்கைப் பார்த்து ஸ்டெனோவைக் கூப்பிடும்படி உத்தரவிட்டார். ஸ்டெனோ வந்ததும் நீதிபதி தீர்ப்பைச் சொல்லத் தொடங்கினார். தீர்ப்பின் முடிவில் குற்றவாளியை நிரபராதி என்று தீர்மானித்து விடுதலை செய்தார்.

சம்பத் உற்சாகத்தில் உடல் பூரித்து நின்றான். தீர்ப்பின் முடிவை ஆவுடையப்ப பிள்ளையிடம் போனில் தெரிவிக்க ஓடினான். அவன் சொன்னதைக் கேட்டுவிட்டு ஆவுடையப்ப பிள்ளை அவனைப் பாராட்டினார். பிறகு, ''நீ உடனே புறப்பட்டு வா'' என்றார்.

''ஏன் சார்?'' — ஆவலுடன் கேட்டான் சம்பத்.

''நளினியின் அப்பா மிஸ்டர் ராகவன் வந்திருக்கிறார்.''

இதைக் கேட்டதும் சம்பத் நடுங்கினான்.

''என்ன சம்பத், நான் சொன்னது புரிந்ததா? சீக்கிரம் வா'' என்றார், ஆவுடையப்ப பிள்ளை.

''ஏன் சார்?'' என்றான் மீண்டும். பீதியினால் குரல் கரகரத்தது.

''உன்னை மாப்பிள்ளை பார்க்க வந்திருக்கிறார். நளினி அனுப்பித்தான் வந்திருக்கிறாராம். நீ இந்த விஷயத்தை என்னிடம் சொல்லவே இல்லையே? நளினி ஒரே பிடிவாதமாக இருக்கிறாளாம், உன்னைத்தான் மணப்பதென்று. நானும் மிஸ்டர் ராகவனிடம் உன்னைப் பற்றிப் பெருமையாகச் சொல்லியிருக்கிறேன்'' என்றார் ஆவுடையப்ப பிள்ளை.

சம்பத் தன்னுடைய காதுகளையே நம்ப முடியாமல் திணறினான். ''தேங்க்ஸ் சார்'' என்று போனில் முனகினான். ஆவுடையப்ப பிள்ளை தொடர்ந்து பேசுவது கேட்டது.

''நீயே நளினிக்குப் போன் செய்து வழக்கில் வெற்றி பெற்றதைக் கூறிவிடு. சீக்கிரம் இங்கே வந்து சேர். உனக்காக மிஸ்டர் ராகவன் காத்திருக்கிறார்'' என்று கூறிவிட்டு ஆவுடையப்ப பிள்ளை போனைக் கீழே வைத்த பிறகும் சம்பத் போனைக் காதில் வைத்தவாறு சிலையாக நின்றுகொண்டிருந்தான்.

அவனுடைய மனக் கண்ணில் 'பென்ஸ்' காரும் பங்களாவும் தோன்றின.




Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran




# ISOLY-I

## ஆக்ஃபா ஐஸோலி-I

எக்காலத்திற்கும் ஏற்ற
சரிநுட்பமான கேமரா

விவரங்களுக்கு, அருகாமையிலுள்ள ஆக்ஃபா-கேவர்ட் வியாபாரியுடன் தொடர்பு கொள்ளுங்கள்.




ஏகபோக விநியோகஸ்தர்கள் :
**ஆக்ஃபா-கேவர்ட் இந்தியா லிமிடெட்.,**
மர்ச்சண்ட் சேம்பர்ஸ், 41, நியூ மெரின்லைன்ஸ், பம்பாய்-400 020
கிளை அலுவலகம்: பம்பாய் ● புது டெல்லி ● கல்கத்தா ● சென்னை
புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ® ஆக்ஃபா-கேவர்ட் ஆண்ட்வெரப்/லீவர்குஷன் அவர்களின் ரெஜிஸ்டர்டு டிரேட் மார்க்.

SIMOES/AG/35 B TAM

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



வெள்ளை வண்ணம் பூசிய இல்லம்
பொன்நிற நெல் மணிகள்
செங்கரும்பு, மஞ்சள் கொத்து
பச்சைக் காய்கறிகள், பழவகைகள்
செம் மண் அடுப்பு, நீலச் சுடர் நெருப்பு
வெள்ளைமாக் கோலமிட்ட மண் பானை
பொன் நிறப் பொங்கல்
சரிகை வேட்டி, சந்தனப் பொட்டு
அரக்குப் பட்டு, செந்தூர குங்குமம்

வண்ணமோ வண்ணம்!




வண்ணம்—நம் வாழ்வோடு ஒன்றிய அங்கம்!

U-GNT-20